# கல்கி

KALKI 11.11.90
ரூ. 2.50



## வண்ண மீன்கள் வளர்ப்பதில் என்ன லாபம்?

''எங்க பிள்ளைங்களோட பொறுப்புணர்ச்சி எங்களைப் பல சமயம் ஆச்சரியப்பட வைக்கும்!''



# பதினாலு பெற்றும் பதறாதவர்!

''பதினாலு குழந்தைகள் எங்களுக்கு.'' குடும்பத் தலைவர் தாமோதரன் சொன்னார். 'இப்ப இருக்கிறவங்க பத்து. நாலு குழந்தைங்க ஒண்ணரை, ரெண்டரை வயசிலேயே மூளைக் காய்ச்சல், இளம்பிள்ளை வாதம் மாதிரியான நோயிலே இறந்திட்டாங்க.''

தமிழ்நாடு மின்சார வாரியத்தில் வாகனங்கள் பழுது பார்க்கும் பணியாற்றி வருகிறார் தாமோதரன். மனைவி பெயர் தவமணி. பெற்றோரால் நிச்சயிக்கப்பட்ட, உறவுக்குள்ளேயே முடிவான திருமணம்.

1969 இல் திருமணம். முதலில் பெண் குழந்தை. அடுத்தடுத்து, ஆண் குழந்தைகளுக்காக ஏங்கி, பிறந்தவை எட்டும் பெண் குழந்தைகள்தான்! தம் முயற்சியில் சற்றும் மனந்தளராத பெற்றோர்கள் மேலும் ஆறு குழந்தைகளுக்கு வித்திட்டனர்.

''என் வீட்டுக்காரரு சம்பளம் வாங்கி அப்படியே எங்க மூத்த பெண் ஹேமாகிட்ட குடுத்துடுவாரு. அவதான் குடும்பத்தை நிர்வகிக்கிறா'' என்ற தவமணியின் குரலில் பெருமை தொனித்தாலும், பதினெட்டு வயதில் அந்தப் பெண்ணின் தலையில் இவ்வளவு பெரிய பாரத்தை ஏற்றிவைத்திருக்கிறோமே என்ற வருத்தமும் மேலிட்டது.

ஹேமா, ரெடிமேட் ஆடைகள் தயாரிப்பு நிறுவனத்தில் பணியாற்றுகிறாள். பத்தாம் வகுப்பு தேர்ச்சி பெற்றிருக்கும் அவள், ஆரம்ப வகுப்பு மாணவர்களுக்கு டியூஷனும் சொல்லிக் கொடுக்கிறாள்.

அன்றாட நடைமுறை இவர்களுக்குக் கடினமாக இல்லையா? உடை, உணவு, படிப்பு...

''கஷ்டந்தான். ஆனாலும் மானேஜ் பண்ணிக்கிட்டு வர்றோம்'' தாமோதரன் சொன்னார்.

''எங்க பிள்ளைங்களோட பொறுப்புணர்ச்சி எங்களைப் பல சமயம் ஆச்சரியப்பட வைக்கும்'' என்று தவமணி குறிப்பிட்டார். ''சாப்பாடு மிகக் குறைவாக இருக்கும். அப்போ, அடுத்தவளுக்கு, இல்லாட்டி அடுத்தவனுக்கு இருக்கட்டும்' என்று தன் பங்கை ரொம்பவும் குறைச்சுக்கிட்டுச் சாப்பிடுவாங்க. சில சமயம் மொத்தமா விட்டுக் கொடுத்துப் பட்டினியாகவே இருப்பாங்க. எப்படித்தான் தாங்குதுங்களோ...? அவர் கண்களில் நீர் தளும்பியது.

அடுத்த இதழில்...



மேல்நாட்டுத் தரத்தில் கைக்கடிகாரங்கள்

— ஸ்பெஷல் ரிப்போர்ட்

கணவனோ அல்லது மனைவியோ ஏன் குடும்பக் கட்டுப்பாட்டு அறுவைச் சிகிச்சைக்கு முயலவில்லையாம்?

''நான் செஞ்சிக்கறேன்னேன். ஆனா எனக்கு ரத்த அழுத்தம் ஜாஸ்தியா இருக்கு. அதனால என் உடல்நலம் பாதிக்கும்னு என் வீட்டுக்காரர் தடுத்திட்டார். வேறே சில பேரும் அப்படித்தான் சொன்னாங்க. அதோட, அப்படிச் செஞ்சுக்கிட்டா' அது தெய்வ குத்தம்னும் சொன்னாங்க.'' தவமணி மிகவும் வெகுளித்தனமாகக் குறிப்பிட்டதைக் கேட்டபோது பரிதாபமாகவே இருந்தது.

''அது எப்படியோ சார், வசதிகள் இல்லாட்டியும் கடன் இல்லாம எங்களால வாழ்க்கை நடத்த முடியுது'' என்றார் தாமோதரன்.

இரண்டாவது மகள் மேகலா காதல் திருமணம் செய்து கொண்டிருக்கிறாள். மூத்தவள்?

''வேண்டாங்கறா. பசங்களைப் பார்த்துக்கிறாளாம்'' என்று தவமணி வருத்தத்துடன் சொன்னார். ''எங்களுக்குத் தெரிஞ்சவங்க, இந்த மனையைத் தந்தாங்க. இதிலே ஓலைக் குடிசை போட்டுக்கிட்டோம். பசங்க படிப்பிலே மணிங்க. கார்ப்பரேஷன் பள்ளிக்கூடத்திலதான் படிக்கிறாங்க.''

''சாப்பாட்டுச் செலவும் கட்டுப்பாட்டுக்குள்ளதான் இருக்கும். நாங்க யாருமே நான்-வெஜ் சாப்பிடறதில்லே'' ஹேமா பொருளாதாரக் கோணத்தில் சொன்னாள். ''நாலு பசுமாடு வெச்சிருந்து பால் கறந்து ஊத்தினோம். ரெண்டு திருட்டுப் போய், ரெண்டு செத்துப் போய், பால் ஊத்தின நினைப்பு மட்டுந்தான் இப்ப இருக்கு'' என்றார். இவர்கள் தினசரி வாழ்வில் கேழ்வரகு, கஞ்சியாகிச் செலவை மிச்சம் பிடிக்கிறது; உடல் வலுவையும் தருகிறது.

குழந்தைகள் எல்லாம் பெற்றோரின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு இருப்பதைப் பார்க்க முடிந்தது. பெரிய குடும்பத்தின் பொறுப்பை, கைக்குழந்தை மகாலட்சுமியும் உணர்ந்திருந்தது. புகைப்படம் எடுக்க நான் தயாரான போது தூளியிலிருந்தும் தூக்கத்திலிருந்தும் எழுப்பப்பட்ட அந்தக் குழந்தை அழவேயில்லை!

படம், பேட்டி: பிரபுசங்கர்

**யோசனை வழங்கிய வாசகர்:**
**எஸ். யோகலிங்கம், சென்னை.**



**''என்னதான் நீ சினிமா ஸ்டாரானாலும் ரெண்டு பேரும் மாலையும் கழுத்துமாப் போய் நின்னா உங்கப்பா, அம்மாவுக்கு அதிர்ச்சியா இருக்காதா?''**

**''எங்கம்மா, அப்பாவுக்கெல்லாம் அதிர்ச்சியா இருக்காது. என் கணவருக்குத்தான் கொஞ்சம் அதிர்ச்சியா இருக்கும்!''**

**— பக்தவத்சலம்.**

சினி சிப்ஸ்:

# சுமனுக்கு மறுவாழ்வு!



* ராஜ்குமார் — 'கோல்டன் டிஸ்க்'



* குணசித்திர சில்க்

●● எஸ். ஏ. ராஜ்குமாருக்கு தரங்கிணி கேஸட் நிறுவனம் 'கோல்டன் டிஸ்க்'' வழங்கியுள்ளது. இவர் இசையமைத்த 'புது வசந்தம்' கேஸட் இரண்டு லட்சத்திற்கு மேல் விற்பனையாகிச் சாதனை புரிந்ததற்காக இந்த விருது. இதற்கு முன்பு இளையராஜா, டி. ராஜேந்தர் ஆகியோருக்கு இந்த 'கோல்டன் டிஸ்க்' வழங்கப்பட்டது. ராஜ்குமார், தாம் இசையமைக்கும் படங்களுக்குத் தாமே பாடல்களையும் எழுதிக் கொள்வது என்ற ஃபார்முலாவை மாற்றி இனி பிற கவிஞர்களுக்கும் வாய்ப்புக் கொடுக்கப் போகிறாராம்.

●● ஒளிப்பதிவாளர் அசோக்குமார் சில்க் ஸ்மிதாவை வைத்து ''தம்பிக்கு ஒரு பாட்டு என்ற படத்தை டைரக்ட் செய்கிறார். கவர்ச்சியை நம்பி படத்தை டைரக்ட் செய்யாமல், கதையை நம்பி இந்தப் படத்தை டைரக்ட் செய்வதாகக் கூறுகிறார். அதே போல் சில்க்கும், ''என்னாலும் அற்புதமான குணசித்திர வேடங்களில் நடிக்க முடியும் என்று இந்தப் படத்தின் மூலம் நிரூபிக்கப் போகிறேன்'' என்று எல்லோரிடமும் கூறிக் கொண்டிருக்கிறார். இனி குணசித்திர வேடங்களுக்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப் போகிறாராம்.

●● 'வைஜெயந்தி — ஐ. பி. எஸ்.' பட வெற்றிக்குப் பின்பு விஜயசாந்தியின் எல்லாத் தெலுங்குப் படங்களையும் தமிழில் 'டப்' செய்யத் தொடங்கி விட்டார்கள். கே. பிரசாத் டைரக்ஷனில் தெலுங்கில் ஹிட்டான ''நீதி விசாரணை'' தற்போது தமிழில் 'டப்' செய்யப்படுகின்றது. அப்படியே தமிழில் டப் செய்யாமல் சில 'துடிப்பான' காட்சிகளைச் சேர்த்து வெளியிடத் திட்டமிட்டுள்ளார்கள். இந்தப் படத்தின் ஹீரோ சுமன். ஜெயிலில் இருந்து வெளி வந்து அவர் நடித்துக் கொடுத்த படம் என்பதால் அவருக்குத் திரை உலகில் மறுவாழ்வு கொடுக்க வேண்டும் என்று எல்லோரும் கடுமையாக உழைத்தார்களாம். அது வீண் போகவில்லை.

●● நடிகர் மோகன் மொட்டை அடித்து ஆளே சுத்தமாய் மாறிப் போய் விட்டார். தற்போது கையில் படங்கள் எதுவும் இல்லையாம். நல்ல நல்ல வெளி நாட்டுப் படங்களையெல்லாம் வரவழைத்து டெக்கில் போட்டுப் பார்த்துக் கொண்டிருப்பதாகக் கூறினார். ''சினிமாவில் சிவாஜி முதற்கொண்டு பெரிய பெரிய ஜாம்பவான்கள் எல்லாம் எத்தனையோ இடைவெளிகளைச் சந்திக்கவில்லையா என்ன? ரீ எண்ட்ரியில் எல்லோரும் உயர்வார்கள். அந்த நம்பிக்கை எனக்கும் இருப்பதால் காத்திருக்கின்றேன்'' என்றார். மறு பிரவேசத்தில் முற்றிலும் வித்தியாசமான ஆக்ஷன் ஹீரோவாக நுழையப் போகிறாராம்! அதற்காகத் தம்மையையும் கதையையும் தயார்ப்படுத்திக் கொண்டிருக்கிறார்.

— எஸ். பாலு.



* நீதி விசாரணை — விஜயசாந்தி


விவசாயி
கருணாநிதி
இலவச மின்சாரம் குடுத்திருக் கேம்ப்பா... ஓட்டு அறுவடை அமோகமா இருக்கணும்! கவனிச்சுக்க...
நான் வேணா இறங்கிக்கிறேன்... வேற யாராவது ஓட்டிக்கிங்க, எனக்கு ஆட்சேபணை இல்லை!
ஜனதா தளம்
ஆதௌ கீர்த்தனாரம்பத்திலே... பகவான் ராமன் என்ன பண்ணினார்? ராவணனை வதம் பண்ணினார்... மாரீசனைக் கொன்னார்... சூர்ப்பணகைக்கு பாடம் கற்பிச்சார்... தாடகை வதம் பண்ணினார்... கரதூஷணர்களை தீர்த்துக் கட்டினார்...
அவரே இப்ப வந்தாக் கூட மத துவேஷ அரக்கனை வதம் பண்ண முடியுமா?



# கல்கி

1990 நவம்பர் 11
மலர் : 49 இதழ் : 15
பிரமோதூத ஐப்பசி 25



## விசனத்துக்குரிய அக்டோபர் 30

நம் நாட்டின் சரித்திரத்தில் அக்டோபர் 30, ஒரு விசனிக்கத்தக்க தினமாக எதிர்காலத்தில் விளங்கும். இந்து தீவிரவாதிகள் சட்டத்தை மீறியது மட்டுமல்ல; இந் நாட்டில் வசிக்கும் லட்சோபலட்சம் முஸ்லிம் சகோதரர்களின் உள்ளத்தில் ஒரு ரணத்தை உண்டாக்கி விட்டார்கள் என்பதுதான் துயரம். இந்த ரணம் இலேசில் ஆறப் போவதுமில்லை; ஹிந்துக்களுக்கு ஏற்பட்ட தலைகுனிவு கலபத்தில் தீரப் போவதுமில்லை.

'அயோத்தியில் மசூதிக்கு எவ்விதச் சேதமும் ஏற்படவில்லை; அங்கே விசுவ ஹிந்து பரிக்ஷத்தின் நோக்கம் ஏதும் நிறைவேறவில்லை' என்று மத்திய அரசும் உ. பி. அரசும் கூறினாலும், அந்தக் கூற்று நம்பும்படியானதாக இல்லை. மசூதியின் உச்சியில் காவிக் கொடி ஏற்றப்பட்டது என்பதற்கும் மசூதி சிறிதளவேனும் இடித்துத் தகர்க்கப் பட்டது என்பதற்கும் நாளிதழ்களில் வெளியாகியுள்ள புகைப்படங்களே சான்று பகர்கின் றன.

இதற்கும், இதனால் அரசியல் நோக்கிலும் சமுதாய நோக்கிலும் ஏற்படப் போகும் பின்விளைவுகளுக்கும் விசுவ ஹிந்து பரிக்ஷத் மட்டுமின்றி அவர்களுக்கு ஆதரவு அளித்து ஊக்குவித்துள்ள பி. ஜே. பி. கட்சியும் முழுப் பொறுப்பேற்க வேண்டும்.

பி. ஜே. பி. தலைவர்கள் வாஜ்பாயி, அத்வானி ஆகியோரிடம் நமக்கு என்றுமே பெருமதிப்பு உண்டு. அவர்களது பொருளாதாரக் கொள்கைகளும் யதார்த்த நோக்கில் அமைந்த இதர பல கொள்கைகளும் நம் கவனத்தை ஈர்த்திருக்கின்றன. ஆனால் அறிவுபூர்வமாகப் பிரச்னைகளை அலசும் அவர்களும் கூடக் கவர்ச்சி அரசியலில் இறங்கி, அயோத்திக்கு ரதம் செலுத்தியதைக் காண மனம் வேதனைப்படுகிறது. ராம ஜென்ம பூமியில் ஒரு மசூதியை அப்புறப்படுத்தி, வேறு இடத்தில் நிர்மாணித்து விட்டு, அந்த இடத்திலேயேதான் கோயில் கட்ட வேண்டும் என்ற பிடிவாதமும், அதற்கான போராட்டமும், நீதிமன்றத் தீர்ப்புக்குக் கூடக் காத்திருக்க முடியாது, பேச்சு வார்த்தைகளுக் குச் செவி சாய்க்க முடியாது என்ற தீவிரப் போக்கும் நாட்டுக்கும் நல்லதல்ல; பி.ஜே.பி. கட்சிக்கும் நல்லதல்ல. முஸ்லிம்களின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொள்வது ஒருபுற மிருக்க, ஹிந்துக்களிலேயே பெரும்பாலோர் அமைதியைத்தான் விரும்புவார்களேயன்றி அடிதடியை அல்ல. தேசிய முன்னணி அரசுக்கு ஓர் இக்கட்டான நிலையைத் தோற்றுவித்து ஆட்சியைக் கவிழ்ப்பதால் இவர்களுக்கு என்ன பலன் கிடைத்து விடப் போகிறது? மறு தேர்தலில் தொகுதி உடன்பாடு இராது. வோட்டுக்கள் சிதற, மீண்டும் காங்கிரஸ் பதவிக்கு வரும்; ராஜீவ் பிரதமராவார். பி. ஜே. பி. ஆளும் மாநிலங்களிலும் தற்போது ஜனதா தளம் ஆதரவை வாபஸ் பெற்று விட்டதால் அங்கேயும் ஆட்சிகள் கலகலத்துக் கொண்டிருக்கின்றன. அங்கெல்லாமும் காங்கிரஸே மீண்டும் பதவிக்கு வரும்.

'ரத யாத்திரையை வி. பி. சிங். ஆரம்பத்திலேயே தடுத்து நிறுத்தியிருக்க வேண்டும்' என்று கூறுவோர் உண்டு. ஆனால் எப்படி நம்முடைய சோதரர்களேயான தொண்டர்கள் மீது அக்டோபர் 30ல் ராணுவமும் போலீஸும் பலப் பிரயோகம் செய்வது சாத்தியமில்லாது போயிற்றோ, அப்படியேதான் தோழமைக் கட்சித் தலைவர் மீதும் எடுத்த எடுப்பிலேயே நடவடிக்கை மேற்கொள்வது சிரமமாக இருந்திருக்கும் பிரதமருக்கு. குறைந்தபட்ச பலப் பிரயோகம் செய்து, அதிகபட்ச பலனைக் காண்பது என்பது ராணுவம் — போலீஸுக்குச் சாத்தியப்படாத விஷயம். அத்வானியின் மனமாற்றத்துக்கும் தேசிய முன்னணித் தலைவர்களும் தோழமைக் கட்சித் தலைவர்களும் நிறையவே முயற்சி எடுத்தார்கள். அத்வானி பிடிவாதத்தைத் தளர்த்தவில்லை.

வி. பி. சிங் தற்போது பதவி துறந்து, வேறு ஒரு ஜனதா தளத் தலைவர் பிரதமராவதால் நிலைமை ஒன்றும் மாறி விடப் போவதில்லை. 'நானும் சில நாட்கள் பிரதமராக இருந்தேன்' என்று கூறிக் கொள்ள ஒரு வாய்ப்பு என்பதுடன் சரி.

ராமர் கோயிலைக் கட்ட இவ்வளவு தீவிரம் காட்டுகிறவர்கள் கருத்தூன்றி ராமாயணத்தைப் படிக்கவில்லை என்பது தெளிவு. அப்படி படித்திருந்தால் ராமனுடைய பெருந்தன்மை, சகிப்புத் தன்மை, அன்புள்ளம், பரந்த மனப்பான்மை, வாழு — வாழ விடு என்ற போக்கு முதலிய அனைத்திலும் ஒரு சிறிதளவாவது பெற்றிருப்பார்கள். இந்த அசம்பாவிதங்களும் தவிர்க்கப்பட்டிருக்கும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# வண்ணமீன்கள் வளர்ப்பதால் என்ன லாபம்?

ராமநாதன் கிருஷ்ணன், பிரேம்ஜித் லால் இவர்களுடன் டென்னிஸ் ஆடிய டேவிஸ் கப் ஆட்டக்காரர் ரபி வேங்கடேசன். ''எனக்கு எட்டு வயதிலிருந்தே அழகான மீன்களைக் கண்ணாடித்தொட்டிகளில் வளர்ப்பதில் அதிக ஆர்வம் இருந்தது!'' என்றார். அவர் வீட்டுக்கு வெளியே தோட்டத்தில் கண்ணாடித் தொட்டிகளில், கண்ணாடி பாட்டில்களில், சிமெண்ட்டு தொட்டிகளில் வண்ண வண்ணமான மீன்கள்!

''சிங்கப்பூரிலிருந்து நிறைய ஏற்றுமதி ஆகிறதாமே?''

''ஆமாம். வருடத்துக்கு மூன்று – நான்கு மிலியன் டாலர்கள் அளவுக்கு அங்கேயிருந்து பல நாடுகளுக்கு வண்ண மீன்களை ஏற்றுமதி செய்கிறார்கள். வண்ண மீன் வகைகள் நூற்றுக்கு மேல் இருக்கின்றன. ஆனால் பதினைந்து இருபது வகையே பிரபலமாக உள்ளன: கோல்ட், ஏஞ்சல்ஸ், மோலி, ஸ்வோர்ட், டெய்ல், கப்பி என்று சிங்கப்பூர் அரசாங்கம் இந்தத் தொழிலுக்கு நிறைய ஊக்கம் தருகிறது. நிலம் ஒதுக்குவதாகட்டும், சலுகைக் கட்டண மின்சாரமாகட்டும், அங்கே அரசு ஆதரவு நிறையவே உண்டு. இங்கே நம் நாட்டில் அவ்வளவு முறையாக இந்தத் தொழில் செய்யப்படுவதில்லை. மெரைன் ப்ராடக்ட்ஸ் டெவலப்மென்ட் ஏஜென்சி எனப்படும் MPDA, இப்போதுதான் சற்றுக் கவனம் செலுத்த ஆரம்பித்திருக்கிறது!'' என்றார் வேங்கடேசன்.

''யார் வேண்டுமானாலும் இவற்றை வளர்க்கலாமா? அனுபவம் எதுவும் தேவையில்லையா?'' என்று கேட்ட போது, ''முதலில் உயிர்களிடத்தில் அன்பு வேண்டும். அடுத்தது பொறுமை!'' என்று கூறிச் சிரித்தார். ''வளர்க்கத் தொடங்கி இரண்டு வருடங்கள் ஆகி விட்டால் அப்புறம் விடவே மனம் வராது. ஒரு லயிப்பு ஏற்பட்டு விடும்.''

சிங்கப்பூர், மலேசியாவிலுள்ள சீனர்கள் வண்ணமீன் வளர்ப்பில் ஆழ்ந்த ஆராய்ச்சி செய்திருக்கிறார்களாம். வருடா வருடம் 'க்ராஸ் ப்ரீடிங்' கண்டுபிடிப்புகள் மூலம் புதிய புதிய வகை மீன்களை உருவாக்குகிறார்களாம். ரபி வேங்கடேசன் அங்கிருந்து, அவ்வப்போது சில வகைகளை வாங்கி வருகிறார்.

''இங்கே வைத்திருக்கும் வண்ண மீன்கள் தவிர, வேறு பண்ணை ஏதும் வைத்திருக்கிறீர்களா?'' என்று கேட்ட போது, உத்தண்டியில் இரண்டு ஏக்கரில் ஒன்றை அமைத்திருக்கிறதாகச் சொன்னார்.

''சிங்கப்பூர் அளவுக்கு இல்லாவிட்டாலும், கொஞ்சமாவது வியாபார அளவில் மீன் வளர்ப்பிலும், விற்பனையிலும் இங்கே எதுவும் செய்ய முடியாதா?''

''தியாகராய நகரில் குமார் என்பவர் வண்ண மீன் பண்ணையை வியாபார ரீதியாக நடத்துகிறார். அவர் தரும் விவரங்கள் உபயோகமாக இருக்கும்!'' என்றார் வேங்கடேசன்.

கிரி சாலையில், குமார், அவரது மனைவி அனிதா குமார் இருவரையும் சந்தித்தோம். வண்ண மீன்கள் வளர்ப்பிலும், விற்பனையிலும் வியாபார ரீதியாகச் செயல்பட முடியும் என்ற நம்பிக்கையை இருவருமே தந்தார்கள். ஆனால் –

''மாதம் சுமார் ஆயிரம் ரூபாய் வரு



* நோயுற்ற மீனை அப்புறப்படுத்துதல்.



* அலங்காரத்தோடு மன அமைதியையும் அளிப்பன வண்ண மீன்கள்.

மானம் வருமளவுக்கு இந்தத் தொழிலில் ஈடுபட வேண்டுமானால், ஆரம்ப கட்டத்தில் சுமார் இருபத்தையாயிரம் ரூபாய் மூலதனம் தேவைப்படும். வேலை வாய்ப்பு இல்லாத இளைஞர்கள், இந்தத் தொகையை வங்கிகளிடமிருந்துதான் எதிர்பார்க்கிறார்கள். வங்கிகள் இந்தத் தொழிலைக் கோழி வளர்ப்பு மாதிரியே கருதி, கடனுதவி அளித்தால், சுயவேலை வாய்ப்புக்கு, எத்தனையோ இளைஞர்களுக்கு உற்சாகமளிக்கும்!'' என்றார் குமார்.

இவரது பண்ணை தாம்பரத்தில் இயங்கி வருகிறது. ''சிறிய அளவில் வீட்டிலேயே கூடப் பண்ணை நடத்தலாம்'' என்றார் அனிதா குமார். ''இந்த மீன்கள் இரண்டு வகையானவை. ஒன்று 'சின்னக் குழந்தைகள்', அதாவது குட்டி மீன்கள். இன்னொன்று முட்டையிலிருந்து வெளிவருபவை. கப்பி, மாலி, பிளாட்டி, ஸ்வோர்ட்டெய்ல் எல்லாம் மீன் குட்டிகளாகவே உருவானவை. கோல்ட் ஃபிஷ், ஃபைட்டர்ஸ், கோராமி எல்லாம் முட்டையிலிருந்து உருவாகிறவை.''

* பல்வேறு ஜாடிகளில் பலவித மீன்கள்.



இவற்றுக்கு ஆகாரம் என்ன?

குட்டைகளிலிருந்து கிடைக்கும் டேஃப்னியா என்ற ஜந்துக்களை மீன் குட்டிகளுக்குக் கொடுப்பார்களாம். சில வகைப் புழுக்களும் உண்டு. இவை தவிர, குழந்தையுணவு போன்று, உடைத்த கடலை, கோதுமை, ராகி இவற்றைப் பொடியாக அரைத்து, அந்த மாவைக் குழைத்துக் கொடுக்க வேண்டுமாம். இரண்டு மாதங்களுக்குப் பிறகு இவற்றின் வளர்ச்சி கண்கூடாகத் தெரியுமாம். முட்டையின் மஞ்சள் கருவையும் கொடுப்பதுண்டாம்.

''அனுபவத்தில்தான் வண்ணமீன் வளர்ப்புக் கலையைக் கற்றுக் கொள்ள முடியும். ஆரம்பத்தில் சிறு தவறுகள் செய்தாலும், தவிர்த்து விடலாம்... நிறையப் புத்தகங்கள் இருக்கின்றன. வண்ண மீன்களை 'ஆர்னமென்டல் ஃபிஷஸ்' என்று பொதுவாகச் சொல்லுகிறார்கள். தகுந்த பாதுகாப்புடன் இந்தியாவின் பல நகரங்களுக்கும் அனுப்பி வைக்கிறோம். சிங்கப்பூருக்குக் கூட ஏற்றுமதி செய்கிறோம். ஜப்பான், தைவான் ஆகிய நாடுகளில் நிறைய இயந்திரங்கள் இந்தத் தொழிலுக்கெனவே உபயோகப்படுத்தப்படு



ஒன்றனை!'' என்றார் அனிதா குமார்.

* ஸ்ரீமதி குமார்

**கி**ணற்றுத் தண்ணீரை மட்டுமே பயன்படுத்த வேண்டும் இந்த வண்ண மீன் வளர்ப்பில். குளோரின் இருக்கக் கூடாது. அப்படியே வேறு தண்ணீர் கொண்டு வந்தாலும், அதிலுள்ள குளோரின் ஆவியாகிப் போக 3, 4 நாள் அப்படியே வைத்திருக்க வேண்டுமாம். தொட்டிகள் 65 ரூபாய் முதல் 500 ரூபாய் வரை ஆகின்றன. (5000 ரூபாய்க்குக் கூடத் தொட்டிகள் உண்டு!)

ஒயிட் ஸ்பாட், ஃபங்கஸ், வேலியா, ஷிம்மிஸ் என்பன இந்த வண்ண மீன்களுக்கு வரும் நோய்களில் சிலவகை. இவற்றுக்கான மருந்துகள், இந்த மீன்களை மொத்தமாக விற்பனை செய்யும் வியாபாரிகளிடமே கிடைக்கும். பல மீன்கள் இருக்கும் தொட்டியில், ஒன்றே ஒன்றுக்கு மட்டும் வந்து விட்டால், அதைத் தனியே எடுத்து விட வேண்டும். வேறு தொட்டியில் அதை விட்டு விடலாம்.

''நடிகை நளினாஸ்ரீயோட கணவர் அவங்களை ரொம்ப 'இன்ஸல்ட்' பண்ற மாதிரி நடத்துக்கிட்டாராம்!''

''எப்படி?''

''அவங்களுக்கு முந்தி இவர் விவாகரத்து நோட்டீஸ் அனுப்பிட்டாராமே?''

— சீர்காழி வி. ரேவதி.



தண்ணீரை நான்கு நாட்களுக்கு ஒரு முறை மாற்ற வேண்டும். தொட்டியிலிருக்கும் நீர் முழுதையும் கொட்டி விடலாகாது. கால் பங்கை எடுத்து விட்டு மீண்டும் நிரப்பி விடலாம். காற்று வசதிக்கும் ஏற்பாடு செய்ய வேண்டும். அழுக்கை அவ்வப்போது 'உறிஞ்சி எடுத்து விடும் குழாய்' மூலம் அகற்றி விட வேண்டும்.

''வயதானவர்களுக்கு, ஒரே இடத்தில் உட்கார்ந்திருக்கும் போது போர் அடிக்கும் என்பார்களே? ஒரு மீன் தொட்டியை வைத்து விட்டால் பொழுது போவதே தெரியாது! நோயாளிகளுக்கு வண்ண மீன்களைப் பார்த்துக் கொண்டிருப்பது இதமாக இருக்கும். மன அமைதியைக் கொடுக்கும்'' என்றார் அனிதா குமார்.

**சி**ந்தூரி ஓட்டல், தனது 'காப்பி ஹவுஸி'ல் அழகான வண்ண மீன் தொட்டியை வைத்துப் பராமரிக்கிறது. மேற்கு ஜெர்மனியிலிருந்து வரவழைக்கப்பட்ட 'எக்ஸிம்' என்கிற குட்டி மெஷின், காற்றை அளித்து, அழுக்கை உறிஞ்சி, நல்ல நீரை அவ்வப்போது தொட்டிக்குள் அனுப்பி வைக்கிறது.

'காஃபி ஷாப்'பில் உள்ள காப்டன் ராஜன் சொன்னார்: ''குழந்தைகள் இங்கே வருவதே இந்த வண்ண மீன்களைக் காணத்தான். அத்தனை சந்தோஷம் அவர்களுக்கு!''

— சாருகேசி.

மேலட்டை வண்ணப்படம், புகைப்படங்கள்: யோகா

யோசனை அளித்த வாசகர், ஆர். தன்ராஜ், சென்னை.


தொழிலாளி, முதலாளி, ஏழை, பணக்காரன் பாலன், வயோதிகன் என்ற
வேற்றுமைகள், மாலையணிந்து விரதமிருக்கும் பக்தர்களிடம் கிடையாது.
அவர்கள் எல்லோரும் ஐயப்ப ஸ்வரூபம். வணங்கப்படவேண்டியவர்கள்
இப்படியொரு அற்புத விரதம்.
ஜானகி
ஆர்ட் பிக்சர்ஸ்
மகர ஜோதி
தயாரிப்பு பிரசாத் மாகன்டி - V. அஞ்சனி குமார்
டைரக்ஷன் K. வாசு
இசை : K.V. மகாதேவன்
Elegant

# கருணாநிதிக்குச் சில யோசனைகள்

## மாணவர் கட்டுரைப் போட்டி!

### ரூ. 50 முதல் பரிசுக் கட்டுரை

பதிமூன்று ஆண்டு காலம் பிள்ளைப் பேறு இல்லாமல் இருந்து தவமிருந்து பெற்ற குழந்தையை எப்படி பேணி காக்க வேண்டுமோ அப்படித்தானே — இந்தப் பதவியை அளித்த மக்களைப் பேணுதல் வேண்டும்... ஆனால் அவ்வாறு நடக்கிறதா?

எதிர்க் கட்சியாக இருந்த போது இலங்கைப் பிரச்னைக்கு வரிந்து பேசியவர் ஆளுங்கட்சியானவுடன் மறந்து போனது ஏன்?

எங்கும் இலஞ்சம் எதிலும் இலஞ்சம் தாண்டவம். நடத்துனர் பணிகளை நிரப்பப் போக்குவரத்துக் கழகங்களில் உள்ள குறைபாடுகளும் இலஞ்ச லாவண்யங்களும் சொல்லமாளாது! டீசல் பற்றாக்குறை காரணமாக நிறைய வண்டிகளை நிறுத்தி விட்டமையால் அதிக பண விரயம் மக்களுக்கு! வேலையின்றியே வருமானம் அவர்களுக்கு...!

ஆனாலும் அமைச்சர் பெருமக்கள் முதல் அதிகாரி வீடுகள் வரை அரசாங்க வண்டிகள் மட்டும் செல்லுமாம்... வெட்கக்கேடு...

பெயர் மாற்றம் செய்வது ஒரு சேவையா...? இதனால் தேவையில்லா பிரச்னைகள் பல உருவாகின்றனவேயன்றி ஆதாயம் என்ன?

சமீபத்தில் ஆசிரியர் பணிகளுக்கான நேர்முகத் தேர்வு நடைபெற்றதில் பல குளறுபடிகள். தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வெழுதினால் ஆயுள் முழுக்கக் காத்திருக்க வேண்டும் ரிசல்ட் தெரிந்து கொள்ள மட்டும்...

ஆண்டு முழுவதும் கஷ்டப்பட்டு மில்லுக்குக் கரும்பு அனுப்பினால் வட்டார வளர்ச்சி நிதி — முதலமைச்சர் சத்துணவுத் திட்டம் நிதி — அது இதுவென பிடித்தம். ஏன் இதையெல்லாம் சுடுகட்ட விவசாயிகள்தான் கிடைத்தார்களா? அவர்களென்ன இளிச்சவாயர்களா?

டாக்டர்களும் — நோயாளிகளும், இடமும் இருந்து விட்டால் நோய் குணமாகி விடுமா...? மாதம் ஒன்றுக்கு ஐந்தாயிரம் ரூபாய் மருந்தை நோயாளிகளுக்கு வழங்க நம் அரசுக்குச் சுமார் ஐம்பதாயிரம் ஆகிறது... ஒரு பி. எச். ஸி.க்கு மட்டும்... இது தமிழக மருத்துவ நிலையங்களின் உண்மை நிலை. தமிழகம் முழுவதும் என்ன செலவு கணக்கிட்டுக் கொள்ளுங்கள். இப்படி இருந்தால் தமிழகம் எப்படி உருப்படும்...?

மலிவு விலை மதுக்கடைகளைத் திறந்து விட்டு விட்டுக் குடிப்பது தவறு என்று பிரசாரம் செய்வதும் அதன் தீய விளைவுகள் பற்றிப் படம் போட்டுக் காண்பிப்பதும் வேடிக்கையாக உள்ளது.

அரசுப் பணியாளர்களிடம் கொடுத்த பணத்திற்குத் தகுந்த வேலையை அவர்களிடம் வாங்க வேண்டும்... இல்லையெனில் அரசு ஆமை வேகத்தில்தான் தன் பணிகளை நிறைவேற்ற இயலும்!

பள்ளிக்கூடம் இருக்கிறது — தரமான கல்வியில்லை.

காவல் நிலையம் இருக்கிறது — தகுந்த பாதுகாப்பில்லை.

இந்த நிலைமைகள் மாற வேண்டும்... அதற்கு முனைப்பான செயல்பாடு வேண்டும்... இல்லையெனில் மக்களிடம் மதிப்பிட முடியாத "வோட்டுரிமை" இருக்கிறது: அது திசைமாறிப் போகும்.

— எல். மாறன்,
உயிர்ப் புள்ளியல் துறை,
கிறிஸ்துவ மருத்துவக் கல்லூரி,
வேலூர் — 632 002.

### அன்று டீ. வி. உடைப்பு. இன்று டீ. வி. யில் தரிசனம்!

அடைமொழிக்கு ஏற்புடைய நிலையில் இருக்க வேண்டிய தாங்கள் இன்று அவதூறு சுமத்தும் நிலைக்குத் தங்களைத் தாழ்த்திக் கொண்டு விட்டது வருத்தத்துக்கும் வேதனைக்கும் உரியது.

செயல்பாடு என்ற சொல்லுக்கு உரியவராக இருந்த தாங்கள் இன்று செயலற்று நிற்பது கேள்விக்குறியாக உள்ளது. எதைக் கேட்டாலும் அங்கே என்ன வாழ்கிறது:



அங்கே விட இங்கே தேவலாம் என்பது ஏற்புடைய வாதமாகாது.

அவ்வப்போது நடத்தும் பெருவிழாக்களினால் கட்சித் தொண்டர்கள் வேண்டுமானால் தெம்புடன் இருக்கலாம். கட்சிக்கு அப்பாற்பட்டவர்கள் மனத்தில் இடம்பெற முடியாது.

எதிர்க்கட்சியில் இருந்த போது தொலைக் காட்சிப் பெட்டியை உடைத்ததன் மூலம் அன்று தமிழக மக்களின் உள்ளத்தில் நிறைந்ததாக நினைத்தீர். ஆனால் இன்று தாங்கள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும் ம.வி. தரிசனம் தந்து கொண்டிருப்பது ...?

எது காலத்தின் கட்டாயம்? 10 முதல் 15 ஆண்டுகள் பதிவு செய்தும் வேலையில்லாமல் திண்டாடும் இளைஞர்களிடையில் பெருவிழா கண்டு கொண்டாட்டம் போடுவது காலத்தின் கட்டாயமா?

மத ஒற்றுமை என்ற பெயரில் அயோத்திக்கு எதிர்ப்பு. ஆனால் ஜாதி வேற்றுமைகளை வளர்த்து மண்டலுக்கு ஆதரவு...

இன்றைய வேஷதாரிகளுக்கிடையே விவேகமான அரசியலைப் பல்லாண்டுகளுக்குப் பிறகு பார்க்க நினைத்தோம். தவறு எங்களுடையது என்று இன்று தெரிகிறது. ஒருவேளை உங்கள் போக்கில் திருப்பம் ஏற்படுமானால் நாட்டு மக்களின் சார்பில் நன்றி!

— எஸ். சிவானந்தராஜா,
எம். காம். முதலாமாண்டு,
தேசியக் (மாலை) கல்லூரி,
திருச்சி — 2.

## நவரத்தின யோசனைகள்!

* விளம்பரப் பலகைகள் தமிழில்தான் எழுதப்பட வேண்டும் என்ற சட்டம் கொண்டு வந்தீர்களே, யோசிக்க வேண்டாமா? சைக்கிள் ஷாப், பஸ் ஸ்டாண்ட், பிரியா மெடிக்கல் ஹவுஸ்; எழில் புரவிஷன் ஸ்டோர் என்று எங்கும் ஆங்கிலத் 'தமிழ்' காட்சி அளிப்பதில் என்ன பெருமை?

* ஆட்சியில் உள்ளவர்கள் உணர்ச்சி வயப்பட்டுப் பேசுவது தகுமா? மண்டல் கமிஷனை எதிர்ப்பவர்களை இது செய்வேன், அது செய்வேன் என உணர்ச்சி வயப்படாமல் செயல்பட்டால் என்ன?

* கல்லூரி மன்றத் தேர்தல்களில் அரசியல் கலவாமல் இருக்கச் செய்யலாமே.

* சமீப காலத்தில் பெட்ரோலில் ஓடும் டூ வீலர்களை உபயோகிப்பது தவிர்க்க முடியாததாகி விட்டது. அனைகளுக்கு லைசென்ஸ் எடுத்து விடலாமே!

* 8 ஆம் வகுப்பு வரை படிக்கும் மாணவ—மாணவிகளுக்கு வழங்கப்பட்டுள்ள இலவச பஸ் பாஸ் போன்று 10 ஆம் வகுப்பு வரை அளிக்கலாமே?

* விளையாட்டு வீரர்களைத் தேர்ந்தெடுக்கும் போது, இன, அரசியல் செல்வாக்கு கலப்பு இல்லாமல், திறமையின் அடிப்படையில் தமிழகத்தில் தேர்ந்தெடுக்கச் செய்யலாமே?

* இறைப்பற்று உள்ளவர்கள் எல்லா மதத்திலும் உள்ளார்கள். இறைப் பற்றுள்ள வேற்று மதத்தவர்களை விட்டு விட்டுத் தாய் மதமாகிய இந்து மத இறைவர்களை மட்டும் தூஷிக்கத் துணை போகாமல் இருந்தால் என்ன?

* மிலாடி நபி விழாவில் கலந்து கொள்ளும் நீங்கள் இந்துமத விழாக்களைப் புறக்கணிப்பதேன்?

* மாணவர் நலன் நாடிய அறிஞர் அண்ணா பிறந்த நாளை "மாணவர் தின"மாகக் கொண்டாட ஏற்பாடு செய்யலாமே.

— ச. மணிவண்ணன்,
பி. எஸ்ஸி., முதலாமாண்டு,
அரசு கலைக் கல்லூரி,
வேலூர்.

ஆசிரியர்: இந்தக் கதையில் தலையும் புரியலே... வாலும் புரியலே... இதையா பிரசுரம் பண்ணச் சொல்றீங்க?

எழுத்தாளர்: ஹி... ஹி... தலையையும், வாலையும் வாசகரையே கண்டுபிடிக்கச் சொல்லிப் போட்டி வெச்சுடுங்களேன்!

— ஆர். ராஜேஸ்வரி



# தமிழக பந்த் கருணாநிதியின் பலத்தைக் காட்டுகிறதா?



• சந்து ஆனார்



• இலவசமாய்த் தந்தார்

*** வி. ராஜ்கோபால், சென்னை — 92.**

**? ஓய்வு பெற்ற ஜெனரல் மானெக்ஷா 'அரசியல்வாதிகள் அனைவரும் நம்மை முட்டாள்கள் ஆக்குகிறார்கள்' என்று அடித்துப் பேசியிருக்கிறாரே?**

அவரைப் போன்ற அறிஞர்களும் செல்வாக்கு மிக்கவர்களும் அரசியலிலிருந்து ஒதுங்கிக் கொண்டால், பிறகு நாலாந்தர அரசியல்வாதிகள்தான் ஆட்சிக்கு வருவார்கள். புலம்பிப் பயன் என்ன? ஐஸன்ஹோவர் என்ன செய்தார்? மக் ஆர்தர் என்ன செய்தார்? நம் நாட்டில் அறிவாளிகளான பிரபலங்கள் என்ன செய்கிறார்கள்? மானெக்ஷா யோசிக்கட்டும் —

*** சி. சந்திரசேகரன், வேலூர்.**

**? மேனகா காந்தி தன் பதவியை ராஜினாமா செய்தது பற்றி...?**

! மூழ்கிக் கொண்டிருக்கும் கப்பலிலிருந்து தப்பித்தால் போதும் என்று படகுக்குப் பாய்கிற கதைதான். நம் மதிப்பில் தாழ்ந்து போனார் மேனகா.

*** ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.**

**? முழு வெற்றியைத் தந்த தமிழக பந்தைக் கருணாநிதியின் வலிமையைக் கணிக்கும் ஓர் அளவு கோலாகக் கொள்ளலாமா?**

! ஆவணமற்றுச் சட்டத்தின் கீழ் அரசு விடுமுறை அறிவித்துவிட்டு பஸ்களையும் நிறுத்திவிட்டால் பந்த் வெற்றி அடையாமல் இருக்குமா? மேலும் இங்கே இட ஒதுக்கீடுக்கும் எதிர்ப்பே இல்லாத போது பந்த் வெற்றி பெறுவதில் வியப்பென்ன, பார்க்கப் போனால் பந்த் நடத்தியது கருணாநிதியின் பலவீனத்தையே காட்டுகிறது. அதனால்தான் அரசுச் சார்பில் பந்த் நடத்த அவசியம் இருப்பதாக அவர் கருதியிருக்கிறார்!

*** எஸ். நாரம்புநாதன், தென்காசி.**

**? எந்த ஆட்சியைத் தேர்ந்தெடுத்தால் ராம ஜென்மபூமி 'பிரச்னைக்குத் தீர்வு காண இயலும்?**

! பி. ஜே. பி. ஏனென்றால், ஆட்சிக்கு வந்த பிறகு அவர்கள் ராமர் கோயிலைக் கட்டினாலும் மசூதியைப் பெயர்ப்பதில் இவ்வளவு தீவிரம் காட்ட மாட்டார்கள். முஸ்லிம் சகோதரர்களை ரொம்பவும் எதிர்த்துக் கொள்ளவும் தயங்குவார்கள். ஆனால் இது நடக்கப் போவதில்லை.

*** கே. ஜனார்த்தனன், சேலம்.**

**? 'ராமர் கோயில் பிரச்னையைத் தீர்க்க ஆறு மாத கால அவகாசம் தேவை' என்று பிரதமர் கூறியிருப்பது எதைக் காட்டுகிறது?**

! ஏற்கெனவே அவர் நிர்ணயித்த ஒரு காலக்கெடு முடிந்து போய்விட்ட நிலையில், ஆறு மாதம் சென்று நாம் ஆட்சியில் இருக்கவா போகிறோம் என்ற துணிச்சலில்தான் இப்போது மீண்டும் அவர் அவகாசம் கேட்டிருக்க வேண்டும்!

*** செ. கருணாநிதி, தகட்டூர்.**

**? தற்போது தமிழ்நாட்டில் அதிகமான**



• அடித்துப் பேசினார்



• வெற்றி பெற்றார்



* தோல்வி கண்டார்



* ராஜினாமா செய்தார்



* அவகாசம் கேட்டார்

* **ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**அ. முஸ்தபா,**
**14/B, ராஜம்பேட்டை தெரு,**
**தக்கோலம் — 631 151.**

**கூட்டம் காணப்படும் இடம் ரேஷன் கடைக் கியூவா? பாக்கெட் கடைக் கியூவா?**

! தாய்க்குலம் அங்கும் தந்தைக்குலம் இங்கும் சமநீளத்துக்கு நிற்க வசதி செய்து கொடுத்திருக்கிறார் கருணாநிதி.

* **கேச. பக்தவத்சலம், விருத்தாசலம்.**

? **அத்வானி கைது செய்யப்பட்டதற்கு லல்லு பிரசாத் யாதவ்வை முலாயம் சிங் யாதவ் பாராட்டியதைப் பற்றி?**

! தம்முடைய சிக்கலான வேலையை அவர் செய்து விட்டதால் நிம்மதிப் பெருமூச்சு விட்ட அதே நேரத்தில் தமக்குக் கிடைக்க வேண்டிய 'பெருமை' அவருக்குப் போய் விட்டதே என்ற ஏக்கப் பெருமூச்சும் எழுந்திருக்கும்!

* **அ. முஸ்தபா, தக்கோலம்.** *

? **ஒரு குடும்பத்தில் அனைவரும் ஒரே கட்சியில் இருப்பது அனுகூலமா? இல்லை, வேறு வேறு கட்சியில் இருப்பது அனுகூலமா?**

! ஒரே கட்சியில் இருப்பது அனுகூலம். வேறு வேறு கட்சியில் இருப்பது புத்திசாலித்தனம் — அதாவது, குடும்பத்துக்குள் அரசியலை நுழைய விடாமல் காக்கத் தெரிந்திருந்தால்!

* **தாழை பிரபு, குடியாத்தம்.**

? **பாகிஸ்தான் தேர்தலில் பேநசீர் கட்சி தோல்வி அடைந்தது பற்றி?**

! தேர்தலில் தில்லுமுல்லு ஏதும் இல்லை என்று அயல்நாட்டுப் பார்வையாளர்கள் கூடக் கூறிவிட்ட நிலையில் 'மோசடி' என்று கூறிக் கொண்டிருப்பது பேநசீருக்கு அழகல்ல. மாறாக, எதிர்க்கட்சியில் பொறுப்புணர்ச்சியுடன் அமர்ந்து, ஆட்சிக்குப் புதிதாக வந்திருப்பவர்கள் ராணுவத் தலைமைக்குத் தலையாட்டாமல் இருக்கவும் ஜனநாயகம் நாட்டில் வலுப்படவும் நன்கு பணியாற்றக் கூடிய வாய்ப்பு உள்ளது. பயன்படுத்திக் கொண்டால் செல்வாக்கு மீண்டும் பெருகும்.

* **மல்லிகை மன்னன், மதுரை — 7.**

? **விவசாயிகளின் பம்பு செட்டுகளுக்கு இலவச மின்சாரம் வழங்கும் கலைஞரின் புரட்சிகரமான திட்டம்...?**

! தமிழகச் சட்டசபைத் தேர்தலையும் அவர் எதிர்பார்க்கிறார் என்பதன் அறிகுறி. இல்லாவிட்டால் இலவச அரிசிக்கு முடிவு கட்டியவர் இலவச மின்சாரத்தை வழங்கியிருக்க மாட்டார். அதுவும் மின் வாரியம் ஏகப்பட்ட நஷ்டத்தைச் சந்தித்துக் கொண்டிருக்கும் போது.

* **என். சம்பத், திருச்சி.**

? **மறைந்த இயக்குனர் சாந்தாராம் பற்றிச் சில வரிகள்?**

! சினிமா என்ற சக்தி வாய்ந்த மீடியத்தைப் பொறுப்புணர்ச்சியோடு கையாண்ட பெருந்தகை. தேசபக்தியை வளர்ப்பது, சமுதாயச் சீர்திருத்தத்துக்கு உதவுவது, சமுதாயப் பிரச்னைகளை அலசுவது என்ற மூன்று பணிகளையும் அவர் செவ்வனே செய்தார். அதே சமயம் பாமரரும் ரசிக்கும் விதமாகப் படம் எடுத்து, வியாபார நோக்கிலும் வெற்றி பெற்றார். 'நல்ல படம் எடுத்தால் மக்கள் தோல்வி அடையச் செய்கிறார்கள்; அதனால்தான் மக்கள் விரும்புவதைக் கொடுக்கிறேன்; பாக்ஸ் ஆபீஸ் நோக்கில் படம் எடுக்கிறேன்' என்று அவர் கூற நேர்ந்ததேயில்லை.

* **டி. எஸ். கண்ணன், கோவில்பட்டி.**

? **மாணவர்களுக்கு அரசியல் தேவையில்லை என்று கருதும் கல்கி, ஜெயலலிதா, கருணாநிதி ஆகியோர் என்ன செய்ய வேண்டும் என்ற போட்டியை எங்களுக்கு வைக்கலாமா?**

! அடாடா! மாணவர்களுக்கு அரசியல் தேவையில்லை என்று சொன்னோமா? எப்போது? மாணவர்களுக்கு அரசியல் அறிவு ரொம்ப ரொம்ப அவசியம்தான் ஸார். நேரடியாக அரசியலில் மாணவப் பருவத்தில் ஈடுபடுவது நல்லதில்லையே யொழிய, அரசியலை நன்றாக அறிந்து கொள்ளத்தான் வேண்டும்.

# சுப்ரஜா கனவுகள்

**ஆ**பீஸில் இருந்து வந்ததும் குடித்த அம்மாவின் அருமையான காப்பிக்குப் பின் அப்பா ஆரம்பித்தார்.

''இந்தப் பொண்ணோட ஜாதகம் எல்லாம் பொருந்தி வர்றது, மனுஷர்கள் எல்லாம் நல்லவாளா தெரியறா... நீயும் போய்ப் பார்த்துட்டு வந்துட்டியானா... மேற்கொண்டு பார்க்கலாம்... இந்தாடா போட்டோ.''

அழகாய்த் தெரிந்தாள். ஹைக்கூ கவிதை போல் பளிச் முகமும் ஸ்லிம் தோற்றமுமாய்க் கவர்ந்தாள். இயல்பான புன்னகை. கண்களில் இலேசாகத் துவளிக்கும் அலட்சியம்.

''எங்கே வேலை?'' என்று போட்டோவை வைத்துக் கொண்டு கேட்டான் பிரசாத்.

''குமாரபாளையத்தில் இன்சூரன்ஸ் கம்பெனியில் இருக்காளாம். நாங்க ஒரு தரம் வீட்டில்போய்ப் பார்த்தாச்சு. அப்புறம் நீதான் சொல்லணும்'' என்று பதில் கிடைத்தது.

பிரசாத் யோசித்தான்.

**பி**ரசாத் இருபத்தொன்பதான இளைஞன். அடர் மீசை. பார்த்ததும் வசீகரிக்கும் முகம். வசதியான வேலை. வீடு வாசல் உண்டு. அவனுக்கானதொரு தர்மபத்தினியைத் தரக நாரதர்கள் பூலோக சொர்க்கத்தில் நிச்சயம் செய்யத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். வரதட்சணை வேண்டாத கொள்கை. கணையாழி காலச்சுவடு ரசிகன்.

''என்னடா சொல்லறே...?'' அப்பா மறுபடியும் கேட்டார்.

''அப்பா... எனக்கு இந்தப் பொண்ணு பார்க்கப் போறது, கேசரியைக் குடும்பத்தோடு பதம் பார்த்துட்டுப் பொண்ணு நல்லால்லேன்னு சொல்றது இந்த மாதிரி... பார்மாலிட்டிஸ் எல்லாம் வேண்டாம். விலாசம் கொடுங்க. நானே பொண்ணை ஆபீஸிலே போய்ப் பார்த்துட்டு வந்து பிடிச்சதுன்னா நேரா நிச்சயதார்த்தம் பண்ணிடலாம். என்ன....''

''....பிடிவாதக்காரனாச்சே... நாங்க ஏதாவது சொன்னால் கேட்கவா போறே...? ஏதோ செய்.''

**ஊ**ருக்குள் நுழையும்போதே ரம்யமான சாய வாசனைகள். தறிகளின் ஜதிஸ்வரங்கள்.

பிரசாத், மனம் முழுக்க சுப்ரஜா கனவுகள். தனக்குத்தானே பேசிக் கொள்ளும் சந்தோஷங்கள், சங்கீதங்கள்.

அந்த ஆபீசைக் கண்டுபிடிப்பதில் சிரமமே இருக்கவில்லை. மிக சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தது ஆபீஸ். நுழைந்ததும் நீலநிற சோபா எதிரில் கேஷ் கவுண்டர். அதற்கு வலதுபுறம் மானேஜர் அறை. அறையையொட்டி வரிசையாய் மேஜைகள், லெட்ஜர்கள், ஃபைல்கள், ஒளி வட்டமாய் சுப்ரஜா...

பிரசாத் மெல்ல நோட்டம் விட்டுக் கொண்டிருந்தான். சுப்ரஜா லாவகமாய்த் தன் வேலையைச் செய்து கொண்டிருந்தாள். பிரசாத் அருகில் போனான்.

சுருள் சுருளான முடி அழகுக்கு அழகாக. துறுதுறுவென்று கண்கள். நெற்றியில் சிக்கனமாய்த் தழும்பு. சாத்விகமான புன்னகை... இவள்தான் எனக்கு மனைவியாக வேண்டும்...

''எக்ஸ்கியூஸ் மீ...''

''எஸ்... வாட் கேன் ஐ டு பார் யூ...''

''..இங்கே முரளின்னு ஒரு அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் இருந்தாரே... அவரைப் பார்க்க



எஸ். லக்ஷ்மிகாந்தன்

னும்'' என்று தயங்கித் தயங்கிக் கேட்க, சுப்ரஜா பதில் சொன்னாள்: ''அவர் ட்ரான்ஸ்பர் ஆகிப் போயிட்டார்...''

'நல்லவேளை அவர் இங்கேயே இருந்திருந்தால் யாரென்று தெரியாமல் மாட்டிக் கொண்டிருப்பேன்.

''...அவர்கிட்டே சில டிடெய்ல்ஸ் கேட்கணும்னு...'' பிரசாத் சுப்ரஜாவுடன் இன்னும் சற்றுப் பேசிப் பார்த்தான. கிளம்பும் போது முடிவு செய்து விட்டான்..'சுப்ரஜா தான் என் மனைவி...!'

''அப்பா, நீங்க மேற்கொண்டு ப்ரொஸீட் பண்ணலாம். எந்தவிதமான கண்டிஷன்களும் போடாதீங்க. எல்லாத்தையும் அவர்கள் இஷ்டம் போல் விட்டுடுங்கோ...''

'ஏனெனில் அவள் எனக்கு வேண்டும். அவளைத்தான் நான் அடைய வேண்டும்.'

''நாம என்னடா கண்டிஷன் போடப் போறோம்? நமக்குத் தேவை நல்ல பொண்ணு நம்ம குடும்பத்துக்கு ஏத்த மாதிரி. அவ்வளவுதானே.''

பிரசாத் அடுத்த சில தினங்களுக்கு மிதப்பில் இருந்தான். சுப்ரஜா மனத்தில் அடிக்கடி தொந்தரவு செய்து கொண்டிருந்தாள். சினிமாப் பாட்டுக்கள் கூட கவிதையாகியது. அவனுக்குள்ளே வெட்கப்பட்டு சுப்ரஜாவிடம் விழ்ந்தான். உரையாடினான். இருவேடமானான். சந்தோஷ அவஸ்தையில் அவன் தடுமாற ஒரு வாரம் கூடத் தாங்க முடியவில்லை. மறுபடியும் அவளைப்





பார்க்க மனசு பரபரத்தது. கெஞ்சியது.

அடுத்த நாள் காலை, சுப்ராஜாவின் அலுவலகத்திற்குச் சென்றான். இதற்குள் பிரசாத்தின் போட்டோ பெண் வீட்டாருக்குப் போயிருந்தது.

''வாங்க...'' சுப்ராஜா புன்னகையுடன் வரவேற்றாள்.

பிரசாத்திற்குள் பட்டாம்பூச்சிகள்.. மோனாலிசா எப்படி இந்த ஆபீசுக்குள்...

என்ன பேசுவது...? வாழ்க்கையின் முதல் பேச்சாக எதை ஆரம்பிக்கலாம்?

''போன வாரம் நீங்க வந்திருந்தீங்க.. இல்லையா?'' என்று சுப்ராஜா கேட்டாள்.

''ம்...''

''எதுக்கு வந்திருந்தீங்க?''

''அது... வந்து கிருஷ்ணமூர்த்தியைப் பார்க்க...''

''முரளின்னு விசாரிச்சீங்க?''

''அது... ஆமாம் முரளியைத்தான் பார்க்கலாம்னு வந்தேன்'' அசடு வழிந்தால் என்ன? வருங்கால மனைவியிடம் இது கூட இல்லையென்றால் எப்படி?

''பொய்... என்னைப் பெண் பார்க்க வந்திருக்கீங்க.. என் கூடப் பேசறதுக்கு வந்திருக்கீங்க. என்னோட அனுமதியில்லாம இப்படிச் செய்யறது தப்புன்னு நான் நினைக்கிறேன். வீட்டில் நாலு பேருக்கு நடுவில் பெண் பார்க்கிறதைவிட இது ரொம்ப அசிங்கமாப் படறது எனக்கு. திருடனை வேவு பார்க்கற மாதிரி செய்திருக்கீங்க. வெளிப்படையா உண்மையா மனம் திறந்து பேசாமல் இந்த மாதிரி உளவு பார்க்கிறதும், தெரியாதபடி பேசி ஆளை ஆழம் பார்க்கிறதும் சந்தேகப் புத்திக்கு அடையாளம். மனசுக்குள் இந்த மாதிரி எண்ணம் இருக்கிற ஆளை என்னால் கல்யாணம் பண்ணிக் குடித்தனம் பண்ண முடியாது. நாளைக்கு இதே மாதிரி என்னென்ன செய்வீங்களோங்கற பயம் வந்துடறது. அதனால்... ஸாரி மிஸ்டர் பிரசாத் நான் உங்களைக் கல்யாணம் செய்துக்கச் சம்மதம் சொல்லப் போறதில்லை...''

பிரசாத் ரொம்ப நேரம் அங்கேயே திகைத்துப் போய் நின்று கொண்டிருந்தான்!

---



• 'இந்த மாவட்டத்தில் எல்லோரும் படித்தவர்கள்' என்கிற சாதனையை இந்தியாவிலேயே முதன் முதலில் ஏற்படுத்தியது கேரளத்தைச் சேர்ந்த எர்ணாகுளம் மாவட்டம். அங்கே மீண்டும் ஒரு புதிய சாதனை உருவாகி வருகிறது. இம்மாவட்டக் கலெக்டர், எம். எல். ஏ. நகர சபைகள், பஞ்சாயத்துக்களின் உறுப்பினர்கள் எல்லோரும் சேர்ந்து பிச்சைக்காரர்களை ஒழித்துக் கட்டும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள். தினசரிகளில் பிச்சைக்காரர்களுக்கு எச்சரிக்கை விடுத்ததோடல்லாமல், பிச்சைக் குரல் இம்மாவட்டத்தில் எங்கு ஒலித்தாலும் போலீஸுக்குத் தகவல் தெரிவிக்குமாறு மக்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். வேலை செய்ய முடிந்த பிச்சைக்காரர்களுக்குக் கல் உடைத்தல், கழிப்பறை, சாலை, சுத்தம் செய்தல் போன்ற பணிகளையும், நோயுற்றோருக்கு ஒதுக்குப்புறமான விடுதி ஒன்றில் சிகிச்சையும் அளித்துப் பாதுகாக்கிறார்கள்.

— ர. சந்திரசேகர்.

---

''இந்த வருஷம் தீபாவளியைக் கொண்டாட முடியாமல் போயிடுச்சா, ஏன்?''

''புடவை செலக்ஷனுக்கு ஜவுளிக் கடைகளுக்குப் போன என் மனைவி தீபாவளி முடிஞ்சு இரண்டு நாள் கழிச்சுத்தான் வீட்டுக்கு வந்தா!''

— ஞா. ஞானமுத்து.




ஜலதோஷம் பறந்து போச்சு!
புதிய 15 கிராம்
Amrutanjan's Cold Rub
யூக்கலிப்டஸ்
அடங்கிய
அமிர்தாஞ்சன்
கோல்ட் ரப்
குழந்தைகளின்
மென்மையான
சருமத்திற்கு மிகவும்
இதமானது...
அன்னையின்
அன்பான
அரவணைப்பைப்
போல...
அமிர்தாஞ்சன்
கோல்ட் ரப்
ஜலதோஷத்திலிருந்து துரித நிவாரணம்
HTA 7351


மூச்சுக்கு புதுமணம் ப்ராமிஸ், பல்லுக்கு ஆரோக்கியம் ப்ராமிஸ்.
இதுதான் ப்ராமிஸ்
டூத்பேஸ்ட்டின் பெருமையே.
BALSARA
Promise
CHAITRA-B BLS 951 TAM



COUNT DOWN — 9

# டான்ஸர் மர்மம்!

"நான் டான்ஸர் செல்வமணியின் நண்பன். என் பெயர் மணிமாறன்."

கதவருகே இந்தக் குரலைக் கேட்டதும் அச்சுதன் உள்ளே நாற்காலியில் விறைப்பானான். எந்த மணிமாறனைத் தேடி அவன் மெட்ராஸுக்குப் பறந்து வந்திருக்கிறானோ அந்த மணிமாறன் இதோ கைக்கெட்டும் தூரத்தில்!

வினாடியும் வீணாக்காமல் எழுந்தான். ஒருத்தனையின் பாய்ச்சலில் வாசலை அடைந்தான். செக்ரட்டரியை மரியாதை இல்லாமல் இடதுபுறம் ஒதுக்கினான். எதிரே நின்றிருந்த இளைஞனின் சட்டையைச் சரேலெனப் பற்றி உள்ளே இழுத்துப் போட்டான். வேகம் மிக முக்கியம்.

அத்தனையும் வினாடிகளில் முடிந்து விட்டது. ஆனால் கடைசி வினாடியிலேயே அச்சுதன் தன் தோல்வியின் கசப்பை நாக்கில் உணர்ந்தான்.

செக்ரட்டரியின் வீட்டு முற்றத்தில் மல்லாந்து விழுந்து நிமிர்ந்த வேட்டி கட்டிய இளைஞன் —

சத்தியமாய் மணிமாறன் இல்லை.

"யார் நீ?" என்றான் அச்சுதன் மிரட்டலாய்.

அந்த சந்திற்குள் நுழையாமல் பிரதான சாலையிலேயே காத்திருந்த மணிமாறன் டாக்ஸி டிரைவரின் தோளைத் தொட்டான்.

"நான் பார்க்க வேண்டியதைப் பார்த்தாகிவிற்று. கிளம்பு."

டாக்ஸி பெட்ரோல் புகையைத் துப்பி விட்டுத் தோட்டா போல் புறப்பட்டது. அது இருபது விளக்குக் கம்பங்களைத் தாண்டிச் சரேலென இடதுபுறம் திரும்பிய போது, மணிமாறன் பின் கண்ணாடி வழியே பார்த்தான்.

அச்சுதன் மூச்சிரைக்க ஓடி வந்து இத்தனை நேரம் டாக்ஸி நின்றிருந்த இடத்தை வெறித்து விட்டுக் காத்திருந்த ஆட்டோவில் பாய்ந்து ஏறுவது தெரிந்தது.

மணிமாறன் புன்னகை புரிந்தான். டிரைவரின் தோளைத் தொட்டு நிறுத்தச் சொன்னான். பேசிய தொகைக்கு ஐந்து ரூபாய் அதிகமாகவே அவன் கையில் திணித்து விட்டு இறங்கினான். எதிர்ப்பட்ட சந்தில் நுழைந்தான். குறுக்கிட்ட இன்னொரு சந்தில் திரும்பினான். அதிலிருந்து வேறொரு தெருவுக்குப் பிரிந்தான். டாக்ஸியோட்டி தன் இடத்தை இதற்கு மேலும் கணித்து விட முடியாது என்று திருப்தி வந்தது. போக்குவரத்து நெரிசலில் தெருவோரம் வேகம் குறைந்த பல்லவன் பஸ்ஸில் தொற்றிக் கொண்டான்.

திருவல்லிக்கேணி லாட்ஜ் ரூம் சின்னதாயிருந்தது. காற்று குறைவாயிருந்தது. சுவரில் சுண்ணாம்பு அங்கங்கே தோலுரித்திருந்தது. மெத்தை முடிச்சு முடிச்சாயிருந்தது.

மணிமாறன் துருப்பிடித்த ஜன்னல் கம்பிகளுக்கு வெளியே பார்வையை எறிந்தான். உயரம் உயரமான கட்டடங்களில் புதுகுப் பகுதிகளின் நிழலில் சந்து. சந்தில் ரிக்ஷாக்கள், நடைபாதை அடுப்புகள். போக்குவரத்து பயமின்றி நடுத் தெருவில் விளையாடும் நிர்வாண ஏழைக் குழந்தைகள்.

அந்த இடத்தில் யாரும் தன்னைக் கவனிக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கையில் மணிமாறன் அந்த லாட்ஜைத் தேர்ந்தெடுத்திருந்தான்.

மெத்தையின் விளிம்பில் உட்கார்ந்து யோசித்தான்.

லெ ஒற்றர்கள் பிடிபட்டதே இல்லை. தூசிழை அளவு வாய்ப்பு இருந்தாலே போதும். அதைத் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்ளும் அவர்களுடைய சாதுரியம் அவர்களைப் பெரும் இக்கட்டுகளிலிருந்து தப்பிக்க வைத்திருக்கிறது.

— ஜொனாத்தன் பொலார்டு.

அஞ்சனா மைக்கேல்ராஜ்

மெட்ராஸ், செல்வமணி, டான்ஸர். மூன்றே வார்த்தைகளை வைத்துக்கொண்டு அவன் புறப்பட்டு வர வேண்டிய சூழ்நிலை. அவனுடைய நினைவு ஆல்பத்தில் இருந்த முகவரிகளைப் புரட்டிப் பார்த்து விட்டான். செல்வமணி என்று எந்தத் தொடர்பும் இல்லை. இந்த செல்வமணி தொழிலுக்குப் புதிதாயிருக்க வேண்டும். விஷ்ணுகான சபாவின் காரியதரிசியைக் கேட்டால் எந்த டான்ஸரைப் பற்றியும் தகவல் கிடைத்து விடும் என்று சொல்லப்பட்டதால்தான் அவரைத் தேடிப் போனான்.

ஆனால் அவர் வீட்டு வாசலில் ஓர் ஆட்டோ நிற்பதைப் பார்த்ததும், அவனுடைய ரத்தத்தில் ஊறியிருந்த எச்சரிக்கைத் தனம் அவன் திட்டத்தை மாற்றியது.

டாக்ஸியிலிருந்து இறங்கி எதிர்ப்புறம் கோயிலிலிருந்து வெளிப்பட்ட ஓர் இளைஞனை நிறுத்தினான். ''ஐந்து நிமிடத்தில் உனக்கு நூறு ரூபாய் சம்பாதிக்க விருப்பமா?''

தனக்குப் பதிலாக இன்னொருத்தனை அனுப்பியதில் மணிமாறனுக்குக் கூடுதலான ஒரு போனஸாம் கிடைத்து விட்டது!

அச்சுதனைச் சென்னையில் பார்த்து விட்டான்.

அதுவும் விஷ்ணுகான சபாவின் காரியதரிசி வீட்டில். அங்கு அச்சுதன் இருந்தால் ஒரே ஒரு காரணம்தான் இருக்க முடியும். அவனுக்குச் செல்வமணி, டான்ஸர் என்ற வார்த்தைகள் கிடைத்திருக்க வேண்டும்.



ஆனால் எப்படி?

மின்னல் ஒன்று உடம்பில் புகுந்தாற் போல் நிமிர்ந்து உட்கார்ந்தான் மணிமாறன். அந்த பேப்பர்! சங்கேத எழுத்துக்களில் அவனுக்கு மெஸேஜ் கிடைத்த பேப்பர். அதை அவன் எரிக்காமல் கசக்கிப் போட்டது நினைவுக்கு வந்தது. எப்பேர்ப்பட்ட தவறு!

இனி எந்த சபா காரியதரிசியையும் அணுக முடியாது. இந்தப் பரந்த சென்னையில் டான்ஸர் செல்வமணியை எப்படிக் கண்டுபிடிக்கப் போகிறேன்? பாகிஸ்தானுக்கு அந்த முக்கியமான டம்மித் துப்பாக்கியை எப்படி அனுப்பப் போகிறேன்?

காலடியில் படபடத்த செய்தித்தாளை எடுத்து மடித்து வைத்த போது மணிமாறனின் இதயத்தில் ஒரு பளிச்.

பத்திரிகைகள்! அவற்றை நான் ஏன் மறந்தேன்?

மணிமாறன் சுறுசுறுப்பாக எழுந்தான்.

அச்சுதன் ஆட்டோவிலிருந்து இறங்கினான்.

அவனைப் பார்த்ததும் காரியதரிசியின் உடம்பு நடுங்கியது. ''மறுபடியும் வந்துட்டீங்களா?''

அச்சுதன் தன் சமாதானப் புன்னகையை உதடுகளில் பொருத்திக் கொண்டான்.

''ஸாரி, உங்கள் வீட்டு முற்றத்தில் எந்த குஸ்தியும் போட வேண்டும் என்று எனக்கு ஆசை இல்லை. நான் ஒரு சர்க்கார் ஊழியன். செல்வமணி என்ற டான்ஸருக்கு

ஏதோ ஆபத்து இருப்பதாக எங்களுக்குத் தகவல். அவளைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.''

''செல்வமணின்னு எந்த டான்ஸரையும் எனக்குத் தெரியாது. என்னையே மறுபடி மறுபடி கேக்கறதுக்குப் பதிலா டான்ஸ் ஸ்கூலுங்கள்ளே நீங்க விசாரிக்கலாம். அரங்கேற்றமே ஆகாத ஸ்டூடண்ட் யாராவது கூட இருக்கலாம்.''

''இப்போது அதற்காகத்தான் வந்தேன். மெட்ராஸில் இருக்கும் அத்தனை டான்ஸ் பள்ளிகளின் விலாசங்களும் எனக்கு வேண்டும்.''

''உட்காருங்க தர்றேன்.''

**லா**ரியிலிருந்து உருளை உருளையாக நியூஸ் ப்ரிண்ட் ஒருபுறம் இறங்கிக் கொண்டிருந்தது. மரத்தடியில் மாருதி கார் நின்றிருந்தது. மாடியில் ஒரு ஜன்னல் திறந்து. ''சீக்கிரம் ஜெனரேட்டரைப் போடச் சொல்லுப்பா. கம்போஸிங் பாதியில் நிக்குது'' என்று இரைச்சல் வந்தது. தற்காலிக ஓய்வை சந்தோஷப்படுத்திக் கொள்ளக் காக்கிச் சட்டைத் தொழிலாளர்கள் சைக்கிள் ஷெட்டருகே நின்று சிகரெட் பற்ற வைத்தார்கள்.

செந்தில்நாதன் சிரித்தான். ''பத்திரிகை ஆபீஸ் என்றாலே இதெல்லாம் சகஜம்'' என்றான்.

மணிமாறன் புன்னகையை மாற்றாமல் கேன்டீனிற்குள் அவன் பின்னே நுழைந்தான். எதிரெதிர் நாற்காலிகளில் அமர்ந்தார்கள். காப்பி ஆர்டர் பண்ணினார்கள்.

''சொல்லுங்கள் என்னை எதற்காகப் பார்க்க விரும்பினீர்கள்?'' செந்தில்நாதன் கேட்டான்.

''நீங்கள்தான் இந்தப் பத்திரிகையின் சினிமா, நாடக விமர்சகர் என்று ஆசிரியர் சொன்னார்.''

''ஆமாம்.''

''செல்வமணி என்று ஒரு டான்ஸரை நான் தேடிக் கொண்டிருக்கிறேன். உங்களுக்கு அவளைத் தெரிந்திருக்கலாம் என்று..''

''செல்வமணியா!'' செந்தில்நாதன் சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டான். ''செல்வமணி என்று எந்த டான்ஸரையும் எனக்குத் தெரியாது. இத்தனைக்கும் எல்லாவித டான்ஸ் புரோகிராம்களையும் நான்தான் கவர் செய்து கொண்டிருக்கிறேன்.''

மணிமாறனின் அடிவயிற்றில் ஏமாற்றத்தின் கத்திக் குத்து. செல்வமணியைக் கண்டுபிடிக்காமல் வீணாக்கும் ஒவ்வொரு தங்க



புதிய
Shield
இண்டர்நேஷனல்
டியோடரன்ட்
உள்ளது
சாதாரண சோப்புகள்.
உடல் வாடையைத் தடுக்காது
புதிய ஷீல்டின்
இண்டர்நேஷனல்
டியோடரன்ட் மட்டுமே
தீவிரமாக உடல் வாடையை
தடுக்கிறது. தன்னம்பிக்கை
புத்துணர்வு தருகிறது . . . மணிக்கு மணி
ஷீல்டு தருகிறது நம்பிக்கை.
தோழர்கள் தருவார்கள் சிறப்புஇடம் - உங்களுக்கே!
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.
LINTAS SH G 78 2416TM

வினாடியும் அவனுக்கும் வெற்றிக்கும் நடுவில் இடைவெளியைக் கூட்டுகிறது என்று அவனுக்குப் புரிந்தது.

தானே விதித்துக் கொண்ட விதியைச் சற்றே தளர்த்தினான்.

''நான் சொல்கிற செல்வமணி பாகிஸ்தானுக்குப் போகும் வாய்ப்பு இருக்கிறது.''

''பாகிஸ்தானா!'' செந்தில்நாதன் நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்தான். ''பாகிஸ்தான் ரேடியோவில் தமிழ் நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாவது உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியும்.''

''தமிழ் நாட்டில் இன்னும் அதிகமான நேயர்களை உருவாக்குவதற்காக பாகிஸ்தானில் ஒரு தமிழ் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று தெரியுமா?''

''தெரியாது!'' மணிமாறன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''பாடல், ஆடல் நிகழ்ச்சி இரண்டிற்கும் தமிழ்நாட்டிலிருந்து ஒரு சின்ன குருப் புறப்படுகிறது. அவர்களைப் பேட்டி எடுத்திருக்கிறேன். அடுத்த ஞாயிறு மலரில் வருகிறது.''

மணிமாறன் தன் உணர்ச்சிகளை முகத்தில் பிரதிபலிக்காமல் மறைத்துக் கொண்டான். நெருங்கி விட்டேன், நெருங்கி விட்டேன்.

''ஆனால் அந்த குருப்பில் கூட நீங்கள் சொல்லும் செல்வமணி இல்லையே?''

காப்பி வந்தது.

''எனக்கொரு உதவி செய்ய முடியுமா நீங்கள்? பாகிஸ்தானிற்குப் போகும் குருப்பில் யார் யார் இருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா?''

''மொத்தம் ஐந்து பேர்'' என்றான் செந்தில்நாதன்.

''**மொ**த்தம் ஐந்து பேர்'' என்றார் கிருஷ்ணையா பிள்ளை. ''எங்கள் டான்ஸ் ஸ்கூலில்தான் பயிற்சி தந்தோம். பாகிஸ்தான் ரேடியோவின் சிறப்பு அழைப்பில் இன்னும் மூன்று நாட்களில் புறப்படுகிறார்கள். ஆனால் அந்த ஐந்து பேரில் நீங்கள் கேட்கும் செல்வமணி என்று யாரும் இல்லை.''

அச்சுதன் நாற்காலியில் பணிவாக உட்கார்ந்திருந்தான். மற்றொரு அறையில் கம்பளம் போர்த்திய மொஸைக்கில் நாட்டியத்தின் 'திம் தரிகிட திம் தரிகிட' பயின்று கொண்டிருந்த மாணவிகளின் மென்மையான சதங்கை ஒலி.

''அந்த ஐந்து பேரும் யார் யார் என்று எனக்குச் சொல்ல முடியுமா, ஐயா? அவர்களுடைய விலாசங்கள் கூட வேண்டும்.''

''தருகிறேன்.''

''இன்னொரு உதவி வேண்டும் ஐயா..''

''என்ன?''

''இது அரசாங்க விவகாரம். நான் உங்களிடம் வந்து விசாரித்தது பற்றி வெளியே யாரிடமும் முக்கியமாக அந்த ஐந்து பேரிடமும் மறந்து போய்க் கூடச் சொல்லி விட வேண்டாம்.''

''பாகிஸ்தானுக்குப் போகிறார்கள் என்றாலே இந்தக் கெடுபிடியெல்லாம் இருக்கும் என்று நானும் எதிர்பார்த்தேன்.'' கிருஷ்ணையா பிள்ளை பிரம்பு நாற்காலியின் கைப் பிடியைத் தட்டிக் கொண்டே சிரித்தார்.

**ம**ணிமாறன் அந்தப் பட்டியலில் பார்வையைச் செலுத்தினான்.

ரங்கபாஷ்யம்.
பிரசன்ன குமார்.
ரத்னமாலா
லக்ஷ்மி ரூபா
சத்யப்ரியா

செல்வமணி என்ற பெயர் இல்லை. ஆனால் அவனுக்கு நாஸரால் கொடுக்கப்பட்ட பெயர் செல்வமணி. நாஸர் தவறு செய்திருக்க முடியாது.

கவனமில்லாது இன்னொரு முறை அந்த பெயர்களில் பார்வையை ஓட்டினான்.

திடீரென்று மூளையில் சிக்கலான புதிரின் சதுரங்கள் அவற்றின் இடங்களில் பொருந்தின. நாஸர் வேண்டுமென்றேதான் பெயரை மாற்றித் தந்திருக்க வேண்டும். இது ஏன் எனக்கு முன்பே தோன்றாமல் போயிற்று?

அந்த ஐந்து பெயர்களில் செல்வமணி யார் என்பது இப்போது மணிமாறனுக்குப் புரிந்து விட்டது.

(தொடரும்)





# ஆரோக்கிய பானங்களால் ஆபத்தா?

**சா**தம் தும்பைப் பூவைப் போல் வெள்ளையாய் இருக்க வேண்டும். கீரை, பச்சைக் காய்கறிகள் சமைத்தபின் அழுக்கு நிறம் பெறாமல் பசேலென்றே இருக்க வேண்டும், சமையல்நேரம்குறையவேண்டும், பூரி, பஜ்ஜி போன்றவை 'புஸ்'ஸென்று உப்பி வரவேண்டும், பகோடாவிற்குக் கர கரப்பு அதிகமாக வேண்டும், சப்பாத்தி மென்மை பெற வேண்டும் என்றெல்லாம் கருதியும் இன்னும் பல காரணங்களுக்காக வும் ஆப்பசோடா எனப்படும் சோடியம் பைகார்பனேட்டைச் சமையலில் சேர்க்கி றோம்.

இதன் தீய விளைவுகள் பற்றிய விழிப்புணர்வு கொஞ்சம் கொஞ்சமாகப் பரவியுள்ளதால், பல இல்லத்தரசிகள் இதை உபயோகிப்பதை நிறுத்தி விட்டனர்.

ஆனால், மத்தியதரவகுப்பினர்கூட இன்றி யமையாததெனக் கருதி, ஏராளமாய் விலை கொடுத்து வாங்கி, குழந்தைகளுக்கும் கரைத்துக் கொடுக்கும் ஆரோக்கிய பானங் களில் இந்த இரசாயனப் பொருள் அடங்கி யிருக்கிறது. இதை, இப்பானங்கள் தயாரிக் கும் பவுடர்கள் அடங்கிய புட்டியிலும் டப்பாவிலும் அச்சிட்டிருக்கிறார்கள்!

"சோடா சேர்த்துச் சமைத்த பொருட் களைத் தொடர்ந்து சாப்பிட்டால் பசி யின்மை, வாந்தி, வயிற்று உப்புசம் இவைக ளால்தொல்லைவரும். சிலசமயம் 'காஸ்டிரிக் அல்சரி'லும் கொண்டு போய் விடுவ துண்டு. மேலும் உணவிலிருக்கும் புரதச் சத்தின் நல்விளைவுகளைச் சோடா குறைக் கிறது. வைட்டமின் 'சி'யைப் பெரிதும் அழிக்கிறது. நீரில் கரையும் 'பி' வைட்டமின் களானதையாமின், ரிபோஃபிளேவின் ஆகிய வற்றை அதிக அளவிலும், பான்டோதெனிக், ஃபாலிக் ஆசிட், 'பி' 12 ஆகிய சத்துக்களைச் சற்றுக் குறைந்த அளவிலும் பாதிக் கிறது" என்கின்றனர் வாலண்டரி ஹெல்த் சர்வீஸில் சத்துணவு ஆலோசகர்களாகப் பணியாற்றும் மீராவும் மாலாவும்.

**இ**ந்தத் தீய விளைவுகளை மருத்துவர் களும் ஆமோதிக்கிறார்கள். நீர் பிரியாத தொந்தரவு இருக்கும் சில சிறுநீரக சம்பந்த மான வியாதிகள், கல்லீரல் கோளாறுகள், அதிக வேலைச்சுமை காரணமாக உண்டா கும் இதய வலிகள் — இவற்றுக்கான மருந்து கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, சோடியம் கலந்த பானங்கள் மிகுந்த பாதிப்பை ஏற்படுத்தும் என்று கூறுகி றார்கள்.

**வெ**ளிநாட்டு ஆரோக்கிய பானம் தயா ரிப்பாளர்கள், இந்தக் கருத்துக்கு மதிப்புக் கொடுத்ததாகத்தான் தெரிகிறது. உதாரண மாக, நமக்கு மிகவும் பிரபலமாகத் தெரிந்த ஓவல்டின், மைலோ ஆகிய பானங்களில் சோடியம் அல்லது பொட்டாசியம் பை கார்பனேட் சேர்ப்பதை அவர்கள் விட்டு விட்டார்கள்.

ஆனால் நம் நாட்டிலோ சோடியம் பைகார்பனேட்டின் தீமைகளை அறிந்தோ, அறியாமலோ நாம் அதனைத் துளித் துளியாக அன்றாடம் அருந்தி வருகிறோம். பி. வி. ஓ. விஷயத்தில் திடீரென்று வெடித்தது போன்ற நுகர்வோர் விழிப் புணர்வு இந்த விஷயத்திலும் ஏற்பட்டா லன்றி, பிரச்னைக்குத் தீர்வு கிடையாது.

**— நிர்மலா சக்கரவர்த்தி**

**உண்மைக் கதை:**

# தோல்வியை விரட்டிய விஜயரங்கன்



• விஜயரங்கன்

ஒரு மாத காலமாய்க் கண்களுக்குள் ஏதோ விழுந்து மிதப்பது மாதிரி ஓர் உறுத்தல். முன்பெல்லாம் வீட்டுக் கூரை முகட்டில் லாந்தர் விளக்கு எரிந்தாலும் எழுத்துக்கள் பளிச்சென்று தெரியும். இப்போது விளக்கைப் பக்கத்தில் வைத்துக் கொள்ள வேண்டியிருந்தது.

கல்லூரி ஆசிரியர்கள் எங்கெங்கோ இலவச வைத்தியத்திற்கு ஏற்பாடு செய்தார்கள். பலன் ஒன்றுமில்லை.

இப்படியே கொஞ்சம் கொஞ்சமாய்ப் பார்வை மழுங்கி ஒருநாள் ஒட்டு மொத்தமாய் இருட்டாயிற்று.

அம்மா பதறினாள். ஒவ்வொரு திசையாய்த் திரும்பிக் கைகூப்பிக் குலதெய்வங்களை வேண்டினாள்! பாவம், கழுத்து ஒடிய அரிசி மூட்டையைச் சுமந்து ஐந்தும் பத்தும் சம்பாதிக்கின்ற அம்மாவுக்கு வேறு என்ன செய்ய முடியும்!

விஜயரங்கனைப் பரிசோதித்த டாக்டர்கள் அனைவருமே 'இவருக்குப் பார்வை நரம்புகள் பழுதாகி விட்டன. இனி ஒன்றும் செய்ய வே முடியாது' என்று கைவிரித்தவுடன் முனியம்மாளுக்கு இருபத்து மூன்று வயது மகன் பாரமாகிப் போனான். தன் துக்கத்தைச் சும்மாட்டுத் துணிக்குள் சுருட்டி வைத்துக் கொண்டு மீண்டும் அரிசிப் பாரம் சுமக்கத் துவங்கினாள்.

விஜயரங்கனுக்கு மூன்றாவது வருஷ பி. ஏ. தேர்வை எப்படித் தான் எழுதப் போகிறோமோ என்று ஒரே தவிப்பு. கல்லூரியில் ஆசிரியராக வேண்டும் என்ற தன்னுடைய கனவு இந்த இருளில் கரைந்து விடுமோ என்ற துக்கம். தன்னையே நம்பியிருக்கின்ற பெற்றோர்களுக்கு இனி உதவ முடியாதா? புறம்போக்கு நிலத்தில் மண் குழைத்துக் குடிசை எழுப்பி அதற்குள் வாழும் தன் குடும்பத்திற்குத் தான் தூண் என்று சொன்னார்களே!...' அலை அலையாய் ஆயிரம் கேள்விகள்.

பி. ஏ. சிலபஸ் முழுவதையும் வெங்கடேஷும் மற்ற நண்பர்களும் இரவு முழுவதும் கண் விழித்துப் படித்துக் காட்டினார்கள். ஆசிரியர்கள் கேள்விகளை வாசிக்க, விடைத்தாளில் ஓர் அனுமானமாய் எழுத்துக்களை எழுதினார், விஜயரங்கன்.

முடிவு, முதல் வகுப்பில் வெற்றியாய் வந்தது. மனத்தில் பல புதிய நம்பிக்கைச் சிறகுகள் முளைத்தன. இன்னும் கொஞ்சம் முயன்று எப்படியாவது எம். ஏ. முடித்து விட்டால் போராடியாவது வாத்தியார் உத்தியோகம் பெற்று விடலாம். பிற்பாடு கொஞ்சமாவது வீட்டின் சுமையைத் தன் தோளுக்கு மாற்றிக்கொள்ளலாம். மாநிலக் கல்லூரியில் எம். ஏ. தமிழ் வகுப்பில் சேர்ந்தார்.

நான்குபால்மாடுகளைமேய்த்துச்சொற்பமாய்ச் சம்பாதித்த விஜயரங்கனின் அப்பா, பல பொழுதுகள் பட்டினி கிடந்து மகனுக்குப் பணம் அனுப்பிக் கொண்டிருந்தார். விடுதியிலிருந்து விடுமுறைக்கு வீடு திரும்பும் போதெல்லாம் தெரு விளக்கு வெளிச்சத்தில் எம். ஏ. பாடங்களை அந்தத் தெரு ஸ்நேகிதிகள் நவநீதம், மணிமேகலை, புனிதா, என்று ஒரு பட்டாளமே விஜயரங்கனுக்கு விடியும் வரை வாசித்துக் காட்டுவார்கள். எல்லாவற்றையும் உள்வாங்கிக் கொள்வது கடவுள் புண்ணியத்தில் சுலபமாய் இருந்தது. இரவு பகலாய் உழைத்த உழைப்பு வீண் போகவில்லை. எம். ஏ. முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்றார்.

வாங்கி வந்த பட்டத்தைப் பத்திரமாய் வைக்கக் கூட வீட்டில் இடமில்லை. எதிர் வீட்டில் கொடுத்து வைத்தார், விஜயரங்கன். எங்கெங்கோ வேலை தேடிச் சென்றார். எல்லோருமே உதட்டைப் பிதுக்கிவிட்டார்



கண்ணுக்குக் கண்ணாக விளங்கிக் கணவரைக் கவனித்துக் கொள்வதோடு அவருக்குப் படித்துக் காட்டுவதையும் மகிழ்ச்சியோடு செய்து வருகிறார் திருமதி சந்திரா விஜயரங்கன்.

கள். என்ன செய்வது? சும்மா இருக்கப் பிடிக்காமல் மாடுகளை ஓட்டிக்கொண்டு வயல்வெளிகளுக்குச் சென்றார். அங்கே ஆள் துணையின்றி அனுமானமாய் நடக்க முடியும். அந்த நேரத்தில் நிறையக் கவிதைகள் அவர் மனத்தில் ஊற்றெடுத்தன. நண்பர்களிடம் சொல்லி அவற்றை எழுத வைத்தார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் சிலபஸ் வாங்கி இன்னும் ஓர் எம். ஏ. முடித்தார்.

இரண்டு எம். ஏக்களைத் தூக்கிக்கொண்டு போனால் தந்து விடுவார்களா என்ன? ஏதேதோ சொல்லித் தட்டிக் கழிக்கத்தான் செய்தார்கள். ஊனமுற்றோர் கோட்டாவில் முயற்சி செய்து பார்த்தார். 'உங்களுக்கு எப்படி வேலை தர முடியும்? நீங்கள் பிறவியிலே ஊனமில்லை. இரண்டாவது நீங்கள் 'ப்ரெயில்' முறையில் படிக்கவில்லை...' என்றார்கள்.

எல்லோருமே 'பார்வை' இல்லை என்பதற்காக மட்டும்தானே புறக்கணிக்கிறார்கள் என்று உள்ளே ஒரு புயல் கிளம்பியது. கட்டாயம் ஜெயித்துக் காட்ட வேண்டும்என்ற வெறி கிளம்பியது. 1330 திருக்குறள்களையும் வாசிக்கச் சொல்லித் தலைகீழாய் மனப்பாடம் செய்து கொண்டார். கல்கி, சாண்டில்யன், கு. பா. ரா., புதுமைப்பித்தன் என்று இரவெல்லாம் மாறி மாறி யாரையாவது வாசிக்கச் சொல்லி நேசிக்க ஆரம்பித்தார்.

**கா**ஞ்சி ஸ்ரீமடத்தின் சார்பில் நடத்திய கவிதைப் போட்டியில் 'தங்கம்' பதித்த காசு மாலை பரிசு கிடைத்தது. பெரியவரிடம் பரிசு வாங்க, மனத்தில் புதிய உற்சாகம்.

இந்தப் பரிசளிப்பு விழாவுக்குப் பிறகு, வலம்புரி ஜான் விஜயரங்கனுக்குத் தம் வீட்டில் பாராட்டு விழா நடத்தினார். புலவர் ஆபத்சகாயம் மூலம் விஜயரங்கனுக்குக் கவிஞர் இளந்தேவன் அறிமுகம் கிடைக்க அவர் தாம் கலந்து கொள்ளும் கவியரங்கங்களுக்கு இவரையும் அழைத்துச் செல்லத் தொடங்கினார். அதன் மூலம் கொஞ்சம் பணமும் நிறைய மன மகிழ்ச்சியும் கிடைத்தன.

“**ஏ**ம்பா! இப்படியே சும்மாவே இருந்தால் எப்படி?, ஏதாவது லோன் போட்டு டெலிபோன் பூத்... இப்படி ஏதுனா வைக்கலாமே?”

சிலர் முகத்துக்கு எதிரே இப்படிக் கேட்டது வேதனையை ஏற்படுத்தியது. 'பார்வை' இல்லாதவர்கள் எல்லாருமே டெலிபோன் பூத்துக்குத்தான் லாயக்கு என்று நம்மூரில் ஒட்டுமொத்தமாய் ஒதுக்கி விடுகின்றார்களே என்ற வேதனை. இரண்டு எம். ஏ. முடித்து எட்டு வருடங்கள் ஓடியாயிற்று. இனி ஆசிரியர் வேலை சாத்தியமில்லையோ என்று ஸ்டேட் வங்கி அதிகாரி முத்தையாவை நண்பர் ஒருவர் மூலம் சந்தித்தார். வாரி



• வாசித்துக் காட்டிய புனிதா



• விஜயரங்கனின் பெற்றோர்

லோன் கேட்டார். பார்வையற்றவர் என்பதால் விண்ணப்பம் முதலில் உயர் அதிகாரிகளால் நிராகரிக்கப்பட்டாலும் முத்தையன் இவரிடம் நம்பிக்கை வைத்துச் செய்த பலத்த சிபாரிசினால் கடன் கிடைத்து, லாரி வாங்கி விட்டார். முறையாக லோனைக் கட்டிக் கொண்டு வருவது மட்டுமில்லாமல், லாபத்தில் வண்டி ஓட்டி வருகிறார்.

முன்பு போல் இப்போது பட்டினி கிடக்க வேண்டியதில்லை! லாரி லோன், டிரைவர் சம்பளம், மற்றும் கூலியாட்களுக்குப் போக சாப்பிட முடிகின்றது. உள்ளே பத்துப் பேருக்குக் கல்வி சொல்லிக் கொடுக்க வேண்டும் என்ற பசி மட்டும் அடங்கவில்லை.

அம்மா மகனுக்குப் பெண் தேடத் துவங்கினார். விஜயரங்கனுக்கு ஏதோ தமிழ் எழுத, வாசித்துக் காட்டக் கூடிய பெண்ணாக வாய்க்க வேண்டும் என்று ஆசை! காஞ்சிபுரத்தில் ஒரு பெண் பார்த்தனர். துணிந்து, ''நான் இவரையே கட்டிக்கிறேன்'' என்று அழுத்தமாய் அவள் சொன்ன

• மனைவி சந்திரா



வுடன் சுபமுகூர்த்தத்தில் அடக்கமாய் விஜயரங்கனின் திருமணம் நடந்தது. தன்னை நம்பி வந்து சேர்ந்த இளம் மனைவியை நினைக்க விஜயரங்கனுக்குக் கண்களில் நீர் திரண்டது. உலகமே ஏதோ ஒரு நம்பிக்கையில்தான் சுற்றுவதாகப் பட்டது.

எதிர்பாராத விதமாய் ஒரு நாள், இளந்தேவன், செம்பியம் சி. டி. டி. இ. மகளிர் கல்லூரி தாளாளர் எலிசபெத் தாமஸ் என்பவரிடம் விஜயரங்கனை அழைத்துச் சென்று அறிமுகப்படுத்த, இவர் தம் ஆசையை அந்த அம்மாளிடம் தெரிவித்துவிட்டு இதுவரை தாம் எழுதிய கவிதைகளின் கையெழுத்துப் பிரதிகளையும் கொடுத்துவிட்டு வந்தார். ஒரு வாரம் கழித்து —

'உங்களுக்குத் தமிழில் நல்ல புலமை இருப்பதை அறிகிறேன். உங்களுக்குப் பகுதி நேர லெக்சரர் போஸ்ட் எங்கள் கல்லூரியில் தருகின்றோம். நாளை வந்து அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரை வாங்கிக் கொள்ளுங்கள்.'

பூரித்துப் போனார் விஜயரங்கன். நேரில் சென்ற போது தமது கவிதைகள் புத்தகமாகக் ''கவிதை விழிகள்'' என்ற தலைப்பில், அச்சாகும் என்றும் விரைவிலேயே நூல் வெளியீட்டு விழா நடக்கும் என்றும் அறிந்தார்.

படித்துப் பத்தாண்டுப் போராட்டத்திற்குப் பின்பு ஒரு ஆகஸ்ட் தினத்தில்தான் விஜயரங்கனுக்கு விடிந்தது!

'இளைஞனே, நீ மட்டும் நிமிர்ந்து நின்றால் இமயமலை உனக்கு இடுப்பு உயரம் தான்' என்பதை நிஜமாக்கிவிட்டார் விஜயரங்கன்!

— பாரதிபாலன்.

வண்ணப்படம், புகைப் படங்கள்:
ரமணன்.

# உயரும் விலைவாசியுடன் உங்கள் ஓய்வு கால ஊதியத்தை ஈடுகட்டுவது எப்படி.



உங்கள் வருமானத்தை பணவீக்கத்தினால் ஏற்படும் விளைவுகளிலிருந்து பாதுகாக்க வும். இந்த் ஜ்யோதியின் ஒளி மற்றும் பாதுகாப்பினை நாடுங்கள். இது, அட்டவணையில் குறிப்பிட்டுள்ள உறுதியான ஆதாயத்துடன் கூடிய ஒரு வளரும் திட்டமாகும்.

| [illegible] | [illegible] | [illegible] | |
|---|---|---|---|
| | | [illegible] | [illegible] |
| 1 | 12.75% | [illegible] | 31.3.92 |
| 2 | 13.25% | 1.4.92 | 31.3.93 |
| 3 | 13.75% | 1.4.93 | 31.3.94 |
| 4 | 14.25% | 1.4.94 | 31.3.95 |
| 5 | 14.75% | 1.4.95 | 31.3.96 |
| 6 | 14.75% | 1.4.96 | 31.3.97 |
| 7 | 15.25% | 1.4.97 | 31.3.98 |

**திட்டத்தின் சிறப்பு அம்சங்கள்**

- இந்தியன் பாங்க் மியூச்சுவல் ஃபண்டின் மற்றொரு வெற்றி பெறும் திட்டம் இந்த் ஜ்யோதி. இந்த் ரத்னா மற்றும் சுவர்ண புஷ்பா என்ற இரு திட்டங்களை உங்களுக்கு வழங்கியவர்களிடமிருந்து.
- பாதுகாப்பை முற்றிலும் பெற்றது. அதிகப்படியான வருவாயினை உறுதி செய்கிறது. முதலாம் ஆண்டில் 12.75% லிருந்து 7 வது வருடத்தில் 15.25% ஆக அதிகரிக்கிறது.
- கூடுதலாக போனஸ்.
- பங்கீடு அளிக்கப்படுவது உறுதி.
- ஒரு வருடம் கழித்து பம்பாய் மற்றும் இதர ஸ்டாக் எக்ஸ்சேஞ்சுகளில் அட்டவணைப்படல் வசதி.
- 15 நவம்பர் 1990 க்கு முன்பு முதலீடு செய்பவர்களுக்கு தனிச்சலுகை.

இந்தியன் பாங்கின் எல்லா கிளைகளிலும் விண்ணப்ப படிவங்கள் கிடைக்கின்றன மற்றும் ஏற்கப்படுகின்றன.

IND JYOTHI

7 வருட வளரும் வருமான நிதி

இந்த் ஜ்யோதி
உங்கள் வாழ்க்கையை ஒளிமயமாக்கும்

இந்தியன் பாங்க்
பரஸ்பர நிதி
உங்கள் செல்வச் செழிப்பின் சிற்பி

## வழங்கீடு துவங்கிவிட்டது

E 2013: TM

# சிவகாமியின் சபதம்

இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## வழித் துணை

குதிரையைத் திருப்பி விட்டுக் கொண்டு பரஞ்சோதி பின்னால் வந்த குதிரையண்டை சென்றபோது அவன் மனத்தில் ஏற்கெனவே ஏற்பட்டிருந்த பீதியெல்லாம் கோபமாக மாறியிருந்தது. அந்தக் குதிரை மேல் வந்தவனுடைய மார்பில் பாய்ச்சுவதற்குச் சித்தமாக அவனுடைய வலது கையானது வேலைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தது.

ஆனால், பரஞ்சோதி அருகில் நெருங்கியதும் அந்தக் குதிரை மீது வந்த மனிதன் செய்த காரியங்கள் வேலுக்கு வேலை இல்லாமல் செய்து விட்டன!

ஆஜானுபாகுவாய் முகத்தில் பெரிய மீசையுடனும் தலையில் பெரிய முண்டாசுடனும் விளங்கிய அந்த திடகாத்திர மனிதன், பரஞ்சோதி தன் அருகில் வந்ததும், ''ஐயையோ! ஐயையோ! பிசாசு! பிசாசு!'' என்று அலறிக்கொண்டு குதிரை மீதிருந்து நழுவித் 'தொபுகடீ'ரென்று கீழே விழுந்தான். அதைப் பார்த்த பரஞ்சோதிக்குப் பயம், கோபம் எல்லாம் பறந்து போய்ப் பீறிக் கொண்டு சிரிப்பு வந்தது. கீழே விழுந்தவன் போர்க்கோலம் பூண்ட வீரன் என்பதையும், அவனுடைய இடையில் கட்டித் தொங்கிய பெரிய வாளையும் பார்த்ததும் பரஞ்சோதி 'கலகல' வென்று சிரிக்கத் தொடங்கினான். பேய் பிசாசுக்குப் பயந்தவன் தான் ஒருவன் மட்டும் அல்ல என்பதை நினைத்தபோது அவனுக்கு ஒருவகையான திருப்தி உண்டாயிற்று.

கீழே விழுந்த மனிதன் மீண்டும், ''ஐயையோ! பிசாசு சிரிக்கிறதே! பயமாயிருக்கிறதே!'' என்று அலறினான். அந்த வேடிக்கையை இன்னும் கொஞ்சம் அனுபவிக்க விரும்பிய பரஞ்சோதி, குதிரை மேலிருந்தபடியே வேலை நீட்டிக் கீழே கிடந்தவனுடைய கையில் இலேசாகக் குத்தியவண்ணம், பிசாசு பேசுவது போல் தானாகக் கற்பனை செய்து கொண்ட அடித்தொண்டைக் குரலில்,

''அடே! உன்னை விடமாட்டேன்! விழுங்கி விடுவேன்!'' என்றான்.

அதற்கு அடுத்த கணத்தில் பரஞ்சோதி சற்றும் எதிர்பாராத காரியம் ஒன்று நடந்தது. அது என்னவென்பதையே அச்சமயம் அவனால் நன்கு தெரிந்து கொள்ளக்கூட முடியவில்லை. ஒரு கணம் அவன் தலை கீழாகப் பாதாளத்தில் விழுவது போலிருந்தது. உடனே அவன் தலையின்மேல் ஆயிரம் இடி சேர்ந்தாற்போல் விழுந்தது! அடுத்தபடியாக அவனுடைய மார்பின்மேல் விந்திய பர்வதம் வந்து உட்காருவதுபோல் தோன்றியது. பிறகு ஒரு பிரம்மாண்டமான பூதம், 'ஹா ஹா ஹா' என்று பயங்கரமான பேய்க்குரலில் சிரித்துக் கொண்டு அவனுடைய தோள்களைப் பிடித்துப் பல

அமரர் கல்கி

மாகக் குலுக்கியது.

சற்று நிதானித்து, மனத்தைத் தெளிவு படுத்திக் கொண்டு சிந்தித்த பிறகுதான் பரஞ்சோதிக்கு நடந்தது என்னவென்பது புலனாயிற்று.

பரஞ்சோதி தன்னுடைய வேலின் நுனியினால் கீழே கிடந்தவனுடைய கையை இலேசாகக் குத்தி, ''விழுங்கி விடுவேன்!'' என்று கத்தியவுடனே, அந்த மனிதன் பரஞ்சோதியின் வேலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு ஓர் இழுப்பு இழுத்தான். அவ்வளவுதான். பரஞ்சோதி குதிரை மேலிருந்து தடாலென்று தலை குப்புறக் கீழே விழுந்தான். உடனே, அந்த மனிதன் மின்னலைப்போல் பாய்ந்து வந்து பரஞ்சோதியின் மார்பின்மேல் உட்கார்ந்து கொண்டு, அவனுடைய தோள்களைப் பிடித்துக் குலுக்கினான். அதோடு ''ஹா ஹா ஹா! நீ பிசாசு இல்லை, மனுஷன்தான்! பிசாசு மாதிரி கத்தி என்னைப் பயமுறுத்தப் பார்த்தாயல்லவா? நல்ல வேடிக்கை! ஹா ஹா ஹா'' என்று உரத்த குரலில் சிரித்துக் கொண்டே கூவினான். பின்னர், பரஞ்சோதியின் மார்பின் மேலிருந்து எழுந்து நின்று பரஞ்சோதியையும் தரையிலிருந்து தூக்கி நிறுத்தி, ''தம்பி! இந்த மயான பூமியில் ஒண்டியாகப் போக வேண்டுமே என்று பயந்து கொண்டிருந்தேன். நல்ல வேளையாய் வழித் துணைக்குக் கிடைத்தாய். நீ எங்கே போகிறாய், தம்பி?'' என்று ரொம்பவும் பழக்கமானவனைப்போல் தோளின் மேல் கையைப் போட்டுக் கொண்டு சல்லாபமாகக் கேட்டான்.

பரஞ்சோதி சற்று முன் நடந்த சம்பவங்களினால் பெரிதும் அதிர்ச்சியடைந்திருந்தான். ஒரு பக்கம் அவன் உள்ளத்தில் கோபம் பொங்கிக் கொண்டிருந்தது. அவமானம் ஒரு பக்கம் பிடுங்கித் தின்றது. தன்னை இப்படியெல்லாம் கதிகலங்க அடித்தவன் சாமானியப்பட்டவன் அல்ல; மகா பலசாலியான வீர புருஷன் என்பதை அவன் உணர்ந்திருந்தான். இதனால் அம்மனிதன் பேரில் ஒருவித மரியாதையும் அவன் மனத்தில் ஏற்பட்டிருந்தது.

ஆனால், ''எந்த ஊருக்குப் போகிறாய், தம்பி?'' என்று அந்த ஆள் கேட்டதும், புத்த பிக்ஷு செய்திருந்த எச்சரிக்கைகள் ஞாபகத்துக்கு வந்தன. தன் தோள் மேலிருந்த அவனுடைய கைகளை உதறித் தள்ளிவிட்டு, ''நான் எந்த ஊருக்குப் போனால் உனக்கு என்ன?'' என்று வெறுப்பான குரலில் கேட்டான் பரஞ்சோதி.

''எனக்கு ஒன்றுமில்லை, அப்பா! ஒன்றுமே இல்லை. இன்று ராத்திரி வழித் துணைக்கு நீ கிடைத்தாயே, அதுவே போதும். ஏதோ இரகசியக் காரியமாய்ப் போகிறாயாக்கும். ஆனால்.....''

இப்படிச் சொல்லி நிறுத்தி, அந்த வீரன் பரஞ்சோதியைச் சற்றுக் கவனமாக உற்றுப் பார்த்தான். அந்தப் பார்வையின் கருத்தை உணர்ந்து கொள்வதற்குள்ளே, மறுபடியும் அவன் தரையிலே விழும்படி நேர்ந்தது. ஒரே நொடியில் அவ்வீரன் பரஞ்சோதியைக் கீழே தள்ளியதுமல்லாமல், தரையில் அவன் அருகில் உட்கார்ந்து கழுத்தை நெரித்துப் பிடித்துக் கொண்டான்.

''நீ வாதாபி ஒற்றனா, இல்லையா? சத்தியமாய்ச் சொல்'' என்று கடுமை நிறைந்த குரலில் கேட்டான்.

பரஞ்சோதிக்குக் கோபத்தினாலும் வெட்கத்தினாலும் கண்களில் ஜலம் வரும் போலிருந்தது. அவன் விம்முகிற குரலில், ''நீர் சுத்த வீரனாக இருந்தால் என்னோடு எதிருக்கெதிர் நின்று வாளோ வேலோ எடுத்துச் சண்டை செய்யும்...'' என்றான்.

''உன்னோடு சண்டை போட வேண்டுமா? எதற்காக அப்பனே? நீ வாதாபி ஒற்றனாயிருக்கும் பட்சத்தில் உன்னை இப்படியே யமனுலகம் அனுப்புவேன். நீ ஒற்றனில்லையென்றால் உன்னோடு சண்டை போடுவானேன்? நாம் இருவரும் சிநேகிதர்களாயிருக்கலாம். நீ ஒற்றனில்லை என்பதை மட்டும் நிரூபித்துவிடு. இதோ, இம்மாதிரி ரிஷப இலச்சினை உன்னிடம் இருக்கிறதா?'' என்று கேட்டுக்கொண்டே அவ்வீரன் இடது கையினால் தன் மடியிலிருந்து வட்ட வடிவமான ஒரு செப்புத் தகட்டை எடுத்துக் காட்டினான். பல்லவ சாம்ராஜ்யத்தில் பிரயாண அனுமதி பெற்ற இராஜ தூதர்களுக்கு அடையாளமாகக் கொடுக்கும் ரிஷப முத்திரை பதித்த தகடு அது.

பரஞ்சோதி வேண்டா வெறுப்புடன் தன் மடியிலிருந்த மேற்படி முத்திரைத் தகட்டை எடுத்துக் காட்டியதும், அவ்வீரன் பரஞ்சோதியின் கழுத்தை விட்டதோடல்லாமல், அவனைத் தூக்கி நிறுத்தி ஆர்வத்துடன் ஆலிங்கனம் செய்துகொண்டு, ''தம்பி! என்னை மன்னித்துவிடு! உன் முகக்களையைப் பார்த்தாலே சொல்லுகிறது, நீ சத்துருவின் ஒற்றனாயிருக்க முடியாதென்று. இருந்தாலும், இந்த யுத்த காலத்தில் யாரையும் நம்பி எந்தக் காரியமும் செய்வதற்கில்லை. நல்லது, குதிரைமேல் ஏறிக்கொள். பேசிக் கொண்டே போகலாம்!'' என்று கூறி அவ்வீரன் தன் குதிரையண்டை சென்று அதன்மேல் வெகு லாகவமாய்த் தாவி ஏறிக் கொண்டான்.

ப

ரஞ்சோதி தனக்குள், "இவனுடன் பேச்சு என்ன வேண்டிக் கிடந்தது? இந்த மலைப்பாதையைத் தாண்டியவுடன் இவனை ஒரு கை பார்த்து இவனுக்குப் புத்தி கற்பிக்காமல் விடக்கூடாது" என்று எண்ணிக் கொண்டே தன் குதிரைமீது ஏறிக்கொண்டான்.

மாலை மங்கி இருளாகக் கனிந்து கொண்டிருந்த முன்னிரவு நேரத்தில், வானமெல்லாம் வைரச் சுடர்களென மின்னத் தொடங்கியிருந்த நட்சத்திரங்களின் இலேசான வெளிச்சத்தில் இரு குதிரைகளும் சேர்ந்தாற்போல் போகத் தொடங்கின.

## முப்பதாம் அத்தியாயம்

## மயூரசன்மன்

அ

ந்தக் காட்டுமலைப் பாதையில் சற்று நேரம் குதிரைகள் மெதுவாகக் காலடி வைக்கும் சத்தத்தைத் தவிர வேறு சத்தம் எதுவும் கேட்கவில்லை.

பிரயாணிகள் இருவரும் மௌனத்தில் ஆழ்ந்திருந்தார்கள்.

பரஞ்சோதியின் மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. பெரிய மீசையுடனும், பிரம்மாண்டமான தலைப்பாகையுடனும் தன் பக்கத்தில் குதிரைமீது வரும் மனிதன் யாராயிருக்கும்? அவன் போர் முறைகளில் கை தேர்ந்த மகாவீரன் என்பதில் சந்தேகமில்லை. சற்று நேரத்துக்குள் தன்னை என்ன பாடுபடுத்தி வைத்துவிட்டான்? சடக்கென்று குதிரை மேலிருந்து தன்னை அவன் இழுத்துக் கீழே தள்ளியதையும், மார்பின் மேல் ஒரு கண நேரம் மலைபோல் உட்கார்ந்திருந்ததையும், மறுபடியும் தான் எதிர்பாராத சமயத்தில் திடீரென்று கீழே தள்ளி இரும்புக் கையினால் தன் கழுத்தைப் பிடித்து நெரித்ததையும் நினைக்க நினைக்கப் பரஞ்சோதிக்குக் கோபமும் ஆத்திரமும் பொங்கின. அதே சமயத்தில் மேற்கூறிய செயல்களில் அந்த வீரன் காட்டிய லாகவமும் தீரமும் சாமர்த்தியமும் அந்த வீரனிடம் பயபக்தியை உண்டு பண்ணின. ஆஹா! இப்படிப்பட்ட ஒரு மகா வீரனுடைய சிநேகம் தனக்கு நிரந்தரமாகக் கிடைக்குமானால் அது எப்பேர்ப்பட்ட பாக்கியமாயிருக்கும்?

தி

ருச்செங்காட்டங்குடியிலிருந்து காஞ்சிக்கு வந்தபோது வழியில் சிநேகமான புத்த பிக்ஷுவுக்கும் இந்த வீரனுக்கும் எவ்வளவு வித்தியாசம்? பிக்ஷு எவ்வளவோ தன்னிடம் அன்பாகப் பேசியிருந்தும், எவ்வளவோ ஒத்தாசை செய்திருந்தும் அவரிடம் தனக்கு ஏற்படாத பக்தியும்வாத்ஸல்யமும் தன்னைக் கீழே தள்ளி மேலே உட்கார்ந்த இந்த மனிதனிடம் உண்டாகக் காரணம் என்ன?

அதே சமயத்தில், அவன் கிளம்பும்போது புத்த பிக்ஷு கூறிய எச்சரிக்கை மொழிகளும் நினைவுக்கு வந்தன. "வழியில் சந்திக்கும் யாரையும் நம்பாதே! சத்ருவாக நடித்தாலும் மித்திரனாக நடித்தாலும் நீ போகுமிடத்தையாவது ஓலை கொண்டு போகும் விஷயத்தையாவது சொல்லிவிடாதே! அஜந்தா வர்ண இரகசியத்தை அறிந்துகொள்ள ஆசை கொண்டவர்கள் ஆயனரைத் தவிர இன்னும் எவ்வளவோ பேர் உண்டு. அதற்காக அவர்கள் உயிர்க் கொலை செய்யவும் பின்வாங்க மாட்டார்கள்; எனவே நீ போகும் காரியம் இன்னதென்பதைப் பரம இரகசியமாக வைத்துக் காப்பாற்ற வேண்டும். அதை உன்னிடமிருந்து தெரிந்து கொள்வதற்குப் பலர் பலவிதமான சூழ்ச்சிகளைச் செய்யலாம். அதிலெல்லாம் நீ ஏமாந்து விடக்கூடாது..."

இவ்விதம் புத்த பிக்ஷு கூறியதைப் பரஞ்சோதி நினைவு கூர்ந்து ஒருவேளை தன் அருகில் இப்போது வந்து கொண்டிருப்பவன் அத்தகைய சூழ்ச்சிக்காரர்களில் ஒருவன்தானோ, தன்னைக் குதிரையிலிருந்து கீழே இழுத்துத் தள்ளி படாதபாடு படுத்தியதெல்லாம் ஒருவேளை பிக்ஷுவின் ஓலையைக் கவர்வதற்காகச் செய்த பிரயத்தனமோ என்று எண்ணமிட்டான். ஓலை தன் இடைக் கச்சுடன் பத்திரமாய்க் கட்டப்பட்டிருப்பதைத் தொட்டுப் பார்த்துத் தெரிந்து கொண்டு, அதைத் தன்னிடமிருந்து கைப்பற்றுவது எளிதில்லை என்று உணர்ந்து தைரியமடைந்தான்.

அ

ப்போது சற்றுத் தூரத்தில் ஒரு நரி சோகமும் பயங்கரமும் நிறைந்த குரலில் ஊளையிடும் சத்தம் கேட்டது. அடுத்த நிமிஷத்தில் முறை வைப்பது போல் அநேக நரிகள் சேர்ந்தாற்போல் ஊளையிடும்



சத்தம் கேட்கத் தொடங்கியபோது, பரஞ்சோதிக்கு ரோமம் சிலிர்த்துத் தேகமெல்லாம் வியர்த்தது. ஒரு கூட்டம் நரிகளின் ஊளை நின்றதும் இன்னொரு சட்டம் ஊளையிட ஆரம்பிக்கும். இவ்விதம் நரிகள் கூட்டங் கூட்டமாக முறை வைத்து ஊளை யிடும் சத்தமும், அந்த ஊளைச் சத்தமானது குன்றுகளில் மோதிப் பிரதிபலித்த எதிரொலியுமாகச் சேர்ந்து அந்தப் பிரதேசத்தையெல்லாம் விவரிக்க முடியாதபடி பயங்கரம்-நிறைந்ததாகச் செய்தன.

இத்தனை நேரமும் மௌனமாய் வந்த வீரன், "தம்பி! இப்பேர்ப்பட்ட காட்டு வழியில் முன்னிருட்டு நேரத்தில் தன்னந் தனியாக நீ புறப்பட்டு வந்தாயே, உன்னுடைய தைரியமே தைரியம்! என் நாளில் எத்தனையோ தடவை நான் தனி வழியே பிரயாணம் செய்திருக்கிறேன். அப்படிப்பட்ட எனக்கே இந்தப் பிரதேசத்தில் சற்று முன்னால் கதி கலக்கம் உண்டாகிவிட்டது!" என்றான்.

அப்போது பரஞ்சோதி சிறிது தயக்கத்துடன், "ஐயா! என்னைக் கண்டதும் தாங்கள் 'பிசாசு! பிசாசு!' என்று அலறிக் கொண்டு குதிரைமேலிருந்து விழுந்தீர்களே? அது ஏன்? உண்மையாகவே பயப்பட்டீர்களா? அல்லது என்னைக் கீழே தள்ளுவதற்காக அப்படிப் பாசாங்கு செய்தீர்களா? சற்று முன்னால் அப்படி அலறி விழுந்தவர், இப்போது கொஞ்சம் கூடப் பயப்படுவதாகத் தெரியவில்லையே!" என்றான்.

"ஆஹா! அது தெரியாதா உனக்கு? ஒரு



வன் தனி மனிதனாயிருக்கும் வரையில் ஒரு பிசாசுக்குக் கூட ஈடுகொடுக்க முடியாது. தனி மனிதனைப் பிசாசு அறைந்து கொன்றுவிடும். ஆனால், இரண்டு மனிதர்கள் சேர்ந்துவிட்டால், இருநூறு பிசாசுகளை விரட்டியடித்து விடலாம்! இந்த மலைப் பிரதேசத்தில் இருநூறாயிரம் பிசாசுகள் இரா வேளைகளில் ''ஹோ ஹோ!'' என்று அலறிக் கொண்டு அலைவதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவ்வளவு பிசாசுகளும் சேர்ந்து வந்தாலும், இரண்டு மனிதர்களை ஒன்றும் செய்ய முடியாது! தம்பி! இந்தப் பிரதேசத்தைப் பற்றிய கதை உனக்குத் தெரியுமா?'' என்று குதிரை வீரன் கேட்டான்.

''தெரியாது; சொல்லுங்கள்!'' என்றான் பரஞ்சோதி.

அதன்மேல் அந்தவீரன் சொல்லிய வரலாறு பின்வருமாறு:

ஏறக்குறைய இருநூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னால் வட தேசத்திலிருந்து வீரசன்மன் என்னும் பிராம்மணன் தன் சீடனாகிய மயூரசன்மன் என்னும் சிறுவனுடன் காஞ்சிமா நகருக்கு வந்தான். அவ்விருவரும் ஏற்கெனவே வேத சாஸ்திரங்களில் மிக்க பாண்டியத்தியம் உள்ளவர்கள். ஆயினும் காஞ்சிமா நகரின் ஸம்ஸ்கிருத கடிகை (சர்வகலாசாலை)யைச் சேர்ந்த மகா பண்டிதர்களால் ஒருவருடைய பாண்டியத்தியம் ஒப்புக் கொள்ளப்பட்ட பிறகுதான் அந்தக் காலத்தில் வித்தை பூர்த்தியானதாகக் கருதப்பட்டது. அதற்காகவே வீரசன்மனும் மயூரசன்மனும் காஞ்சிக்கு வந்தார்கள். ஒருநாள் அவர்கள் காஞ்சியின் இராஜ வீதி ஒன்றில் போய்க் கொண்டிருந்த போது, பல்லவ மன்னனின் குதிரை வீரர்கள் சிலர் எதிர்ப்பட்டார்கள். வீதியில் நடந்தவண்ணம் [illegible] ஒரு முக்கியமான சர்ச்சையில் ஈடுபட்டிருந்த குருவும் சிஷ்யனும் குதிரை வீரர்களுக்கு இடங்கொடுத்து விலகிக் கொள்ளவில்லை. இதனால்

கோபங்கொண்ட குதிரை வீரன் ஒருவன் குதிரை மேலிருந்தபடியே வீரசன்மனைக் காலால் உதைத்துத் தள்ளினான். குருவுக்கு இத்தகைய அவமானம் நேர்ந்ததைக் கண்டு சகியாத சிஷ்யன் அந்த வீரன் கையிலிருந்த வாளைப் பிடுங்கி வீசவே அவன் வெட்டுப் பட்டுக் கீழே விழுந்தான். மற்றக் குதிரை வீரர்கள் மயூரசன்மனைப் பிடிக்க வந்தார்கள். அவர்களிடம் அகப்பட்டால் தன் உயிருக்கு ஆபத்து நேரும் என்பதை அறிந்த மயூரசன்மன், கையில் பிடித்த வாளுடன் கீழே விழுந்த வீரனின் குதிரை மீது தாவி ஏறித் தன்னைப் பிடிக்க வந்தவர்களை யெல்லாம் வீராவேசத்துடன் வெட்டி வீழ்த்திக்கொண்டு காஞ்சி நகரை விட்டு வெளியேறினான்.

பல்லவ ராஜ்யத்துக்கே அவமானம் விளைவிக்கத்தக்க இந்தக் காரியத்தைக் கேட்டு, மயூரசன்மனைக் கைப்பற்றி வருவதற்காக இன்னும் பல குதிரை வீரர்கள் புறப்பட்டுச் சென்றார்கள். ஆனால், அவர்களிடம் அவன் அகப்படவில்லை. கடைசியில், மயூரசன்மன் கிருஷ்ணா நதிக் கரையில் உள்ள ஸ்ரீபர்வதத்தை அடைந்து, அங்கேயுள்ள அடர்ந்த காட்டில் சிறிது காலம் பல்லவ வீரர்களுக்குப் பயந்து ஒளிந்து வாழ்ந்தான். பின்னர், அந்தப் பிரதேசத்தில் வாழ்ந்த மலைச் சாதியரைக் கொண்டு ஒரு பெரிய சைனியத்தைத் திரட்டியதுமல்லாமல் அங்கே சுதந்திர ராஜ்யத்தையும் ஸ்தாபித்தான். பின்னர், அந்தப் பெரிய சைனியத்துடனே, காஞ்சியில் தன் குருவுக்கு நேர்ந்த அவமானத்துக்குப் பழி வாங்கும் பொருட்டுப் புறப்பட்டு வந்தான். மயூரசன்மனின் சைனியமும் காஞ்சிப் பல்லவ சைனியமும் இந்த மலைக்காட்டுப் பிரதேசத்திலேதான் சந்தித்தன. ஏழு நாள் இடைவிடாமல் யுத்தம் நடந்தது. ஆயிரக் கணக்கான வீரர்கள் போரில் மாண்டார்கள். இரத்த வெள்ளம் பெருக்கெடுத்து ஓடி மலைப் பிரதேசத்தையெல்லாம் நனைத்தது.

அப்படி இரத்த வெள்ளம் ஓடிய இடத்திலேதான் சில காலத்துக்குப் பிறகு இந்தப் புரசங்காடு முளைத்தது. மேற்சொன்ன பயங்கர யுத்தம் நடந்த அதே பங்குனி மாதத்தில் ஒவ்வொரு வருஷமும் புரச மரங்களின் இலை உதிர்ந்து இரத்தச் சிவப்பு நிறமுள்ள பூக்கள் புஷ்பிக்கின்றன. அந்தப் போரில் இறந்த ஆயிரக்கணக்கான வீரர்களின் ஆவிகள் இன்னமும் இங்கே உலாவிக் கொண்டிருப்பதாக அக்கம் பக்கத்துக் கிராம ஜனங்கள் நம்புகிறார்கள். ஆவிக் குதிரைகளின் மீதேறிய ஆவி வீரர்கள் வாள்களையும் வேல்களையும் ஏந்தி 'ஹா ஹா' என்று கூவிக் கொண்டு இந்த நிர்ஜனப்



● ரயில்வே பாதையைக் கண்காணிக்கும் வேலைக்கான நேர்முகத் தேர்வு நடந்து கொண்டிருந்தது.

''இரண்டு எக்ஸ்பிரஸ் ரயில்கள் மிகவும் வேகமாக ஒரே பாதையில் வந்து கொண்டிருந்தால் நீ என்ன செய்வாய்?'' என்று ஓர் இளைஞனிடம் அதிகாரி கேள்வி கேட்டார்.

''கைகாட்டியை ஏற்றி ரயில் வர வேண்டாம் என்று அறிவிப்பேன்'' என்று பதில் சொன்னான் பேட்டிக்கு வந்த இளைஞன்.

''அந்தக் கருவி சரியாக வேலை செய்யாவிட்டால்...?''

''சிவப்புக் கொடியைக் காட்டுவேன்!''

''அப்போது இரவாக இருந்தால்...?''

''சிவப்பு விளக்கைக் காண்பிப்பேன்.''

''விளக்கில் எண்ணெய் இல்லை என்றால்...?''

''கள்ளிகளை எடுத்து வந்து நெருப்பு உண்டாக்கி ரயில்களை நிறுத்துவேன்.''

''அப்போது உன்னிடம் தீக்குச்சிகள் இல்லை என்றால்?'' என்று தொடர்ந்து கேள்வி கேட்டார் அதிகாரி.

எரிச்சலடைந்த இளைஞன், ''வீட்டுக்குப் போய் என் தங்கையை அழைத்து வருவேன்'' என்றான்.

''உன் தங்கை வந்து என்ன செய்வாள்? எப்படி ரயிலை நிறுத்துவாள்?'' என்று கேட்டார் அதிகாரி.

''அதற்கில்லை சார்! என் தங்கை தன் வாழ்நாளில் இதுவரை ரயில் விபத்தைப் பார்த்ததில்லை. அவளை அழைத்து வந்து ரயில் விபத்தைக் காட்டுவேன்'' என்றான் இளைஞன்.

— ''பட்டிமன்ற நகைச்சுவை'' என்ற நூலிலிருந்து.

தகவல்: ஏ. கே. சம்சுதீன்.

## அருள்வாக்கு



ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொருவனும் ஒவ்வொரு நாளும் ஒரு பசுக்காவது ஒரு பிடி புல் கொடுக்க வேண்டும்; தோட்டம் உள்ள எல்லோரும் அதில் கொஞ்சமாவது மாட்டுக்கேற்ற அகத்திக் கீரை போட வேண்டும் என்றெல்லாம் ஏற்பாடு செய்து அதன் படியே ரொம்பப் பேர் நடத்தி வந்தார்கள். மாட்டுக்கு ஒரு பிடி என்பதை "கோ க்ராஸம்" என்று சொல்லியிருக்கிறது. இதிலிருந்துதான் இங்கிலீஷில் புல்லுக்கு "க்ராஸ்" என்று பேர் வந்ததோ என்னவோ? மேய்ச்சல் நிலமெல்லாம் குடியமைப்பாயும், தார் ரோடாயும் மாறி வருவதால் நம் கொல்லையிலேயே துண்டு இடமிருந்தால் அதில் ஆத்தி, அறுகு வைத்து, கால்நடைகளுக்குக் கொடுக்க வேண்டும்.

இதற்கெல்லாமாவது கொஞ்சம் செலவு, தியாகம் பண்ண வேண்டியிருக்கிறது. இது கூட இல்லாமல் நம் அகத்தில் கறிகாய் முதலியவற்றை நறுக்கும் போது தோலை வீணாகத்தானே போடுகிறோம்? அப்படிப் போடாமல், சிலர் வீடு வீடாகப் போய் இந்தத் தோலை எல்லாம் 'கலெக்ட்' பண்ணி மாடுகளுக்குப் போட ஏற்பாடு பண்ணினோம். நான் திரும்பத் திரும்பச் சொல்லிச் சொல்லி அநேக இடங்களில் இந்தக் காரியம் நடந்தது; இப்போதும் கூடப் பல இடங்களில் தொடர்ந்து நடக்கிறது.

ஒரு செலவும் நமக்கு இல்லாமலே கறிகாய்த் தோலிகளை நேரே உயிருள்ள ஒரு பசு வாய்க்குப் போட்டு, அது தின்பதைப் பார்த்தால், இதில் நமக்குக் கிடைக்கிற உள்ள நிறைவே அலாதி என்று தெரியும். ஸேவையிலே இதுதான் முக்கியமான அம்சம்: அதில் பணமும் உழைப்பும் பேசுவதைவிட ஜீவனோடு ஜீவன் பேச வேண்டும். ஸேவை செய்கிறவர்கள் ஸங்கமாக ஒன்று கூடும் போது இப்படி உயிர்த் தொடர்பு ஏற்படுவது மட்டுமின்றி, சேவைக்குப் பாத்திரமாகிறவர்களையும் நேரே தங்களோடு தொடர்புபடுத்திக் கொள்ள வேண்டும். ஒரே ஈச்வரன்தானே இத்தனை ஜீவன்களுமாகியிருப்பது? ஜீவ லோகத்துக்குச் சொரிகிற அன்பினால், ஸேவையால் அந்த ஈச்வரத்வத்தை அனுபவித்து அவனுக்கு வழிபாடாகவே இதைச் செய்வதுதான் ஸேவையின் ஸாரம்.

**— ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

பிரதேசத்தில் அலைவதாகவும், யாராவது பிரயாணிகள் இரவு வேளையில் தனி வழியே வந்தால் அவர்களைக் கொன்று இரத்தத்தைக் குடித்துத் தாகத்தைத் தணித்துக் கொள்வதாகவும் சொல்லிக்கொள்ளுகிறார்கள்!

மேற்படி வரலாற்றைக் கேட்டுக்கொண்டிருந்த பரஞ்சோதிக்குக் கொஞ்சம் நஞ்சம் பாக்கியிருந்த பயமும் போய்விட்டது. அங்கே ஆவிகள் அலைவது பற்றிய கதையெல்லாம் வெறும் மூடநம்பிக்கை என்ற உறுதி ஏற்பட்டது. "என்னைக் கண்டதும் இருநூற்றைம்பது வருஷத்துக்கு முன் செத்துப் போன வீரனின் பிசாசுதான் வந்து விட்டதென்று நினைத்து அப்படி உளறி அடித்துக் கொண்டு விழுந்தீரோ?" என்று கூறி நகைத்தான்.

"இரத்தமும் சதையுமுள்ள மனிதனோடு நான் சண்டை போடுவேன். வில் போர், வாள் போர், வேல் போர், மல்யுத்தம் எது வேண்டுமானாலும் செய்வேன். ஆனால், ஆவிகளோடு யார் போரிட முடியும்?" என்று அவ்வீரன் சிறிது கடுமையான குரலில் கூறவே பரஞ்சோதி பேச்சை மாற்ற எண்ணி, "இருக்கட்டும் ஐயா! இங்கே நடந்த யுத்தத்தின் முடிவு என்ன ஆயிற்று? யாருக்கு வெற்றி கிடைத்தது?" என்று கேட்டான்.

"மயூர சன்மனுடைய சைனியத்தைப் போல் பல்லவ சைனியம் மூன்று மடங்கு பெரியது. ஆகையால், பல்லவ சைனியம்தான் ஜெயித்தது. மயூரசன்மனை உடம்பில் முப்பத்தாறு காயங்களுடன் கைப்பற்றிப் பல்லவ மன்னன்முன் கொண்டுவந்து நிறுத்தினார்கள்...!"

"அதன் பிறகு என்ன நடந்தது?" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான் பரஞ்சோதி.

"என்ன நடந்திருக்குமென்று நீதான் சொல்லேன் பார்க்கலாம்!" என்று அவ்வீரன் கூறிப் பரஞ்சோதியின் ஆவலை அதிகமாக்கினான்.

(தொடரும்)

போட்டிக் கதை — 8

# வன்மம்!

**பொ**க்கை வாய் தெரிய அழகாகச் சிரிக்கும் அண்ணல் காந்தியடிகள் படம் மாட்டப்பட்டுள்ள அந்த எளிமையான அறைதான் பள்ளித் தலைமையாசிரியரின் அறை. ஏதோ முக்கியமான வேலையில் மூழ்கியிருந்தார் தலைமையாசிரியர் பிச்சமூர்த்தி.

தயங்கித் தயங்கி உள்ளே நுழைந்தான் ப்ளஸ் டூ மாணவன் குமார். உள்ளூர் அரசியல் பிரமுகரின் மகன். தன்னைத்தான் தலைவனாகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று சக மாணவர்களைச் சம்மதிக்கச் செய்து, மாணவர் தலைவனானவன். எப்பொழுதும் நாலைந்து மாணவர்கள் தன்னைச் சுற்றி வர, அந்தப் பள்ளி முழுவதும் வலம் வருவான். கூடப் படிக்கும் மாணவியிடம் ஏதோ வம்பு செய்ய, அது தலைமையாசிரியர் வரைக்கும் போய் விடவே, இன்று அவரது அறைக்குள் நுழையும்படியாகி விட்டது குமாருக்கு...

**த**லைமையாசிரியர் பிச்சமூர்த்தியைப் பொறுத்தவரை மிகவும் அமைதியான சுபாவம் அவருடையது. படிப்பை விட ஒழுக்கத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பவர். கண்டிப்புக்குப் பெயர் போன இவரைக் கண்டால், ஆசிரியர்கள், மாணவ — மாணவிகள்... ஏன்... இவர்களின் பெற்றோர்களுக்குக் கூடக் கொஞ்சம் அச்சம்தான்!

எதிரே வந்து நின்றவனை நிமிர்ந்து பார்த்தார் பிச்சமூர்த்தி.

''உன் பெயர்...?''

''குமார்... சார்...''

''எந்த கிளாஸ்...?''

''ப்ளஸ் டூ சார்...''

''பொம்பளைப் பசங்ககிட்டே உனக்கென்ன வேலை?''

''சார்... அது... வந்து சார்...''

''பளீர்!'' கன்னத்தைப் பிடித்துக்கொண்டான் குமார்.

''இன்னொரு முறை உன்னைப் பத்திப் புகார் வந்தா, உன்னை இந்த ஸ்கூலை விட்டே அனுப்பிடுவேன்... பீ கேர்புல்...''

மௌனமாகத் திரும்பிச் சென்றான் குமார்.

**ம**றுநாள் காலை...

தலைமையாசிரியரின் அறைக்குள் தன் தந்தை புண்யகோடியுடன் நுழைந்தான் குமார்.

''வணக்கமுங்க...''

''வணக்கம்''

''என் மகனை நேற்று நீங்க அவன் கன்னத்துல அடிச்சீங்களாம்...''

''பொம்பளைப் பசங்ககிட்டே வம்பு பண்ணினால் அறையாமல் கன்னத்தை வருடி திருஷ்டியா சுத்திப் போடுவாங்க...?''

''வாலிபப் பசங்க.. கொஞ்சம் குறும்புத்தனம் இருக்கத்தான் செய்யும்... இதையெல்லாம் நாம் கண்டுக்கக் கூடாதுங்க...''

''இதோ பாருங்க... இது ஸ்கூல்.. இங்கே ஒழுக்கம் மிக மிக முக்கியம்... அதுவும் பெண்கள்கிட்டே ஒழுக்கக் குறைவாக நடந்தால் டிஸ்மிஸ்தான் தண்டனை!''

''இவ்வளவு கண்டிப்பான தலைமை ஆசிரியரை இனி இந்த ஸ்கூல் தாங்காது... வேறே நல்ல ஆசிரியருக்கு ஏற்பாடு செய்ய வேண்டியதுதான்... அப்ப வரேங்க...''

விர்ரென்று தம் மகனை அழைத்துக் கொண்டு வெளியேறினார் புண்யகோடி.

தமது உள்ளூர் அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தி, பஞ்சாயத்துப் போர்டு சேர்மன் முதல் எம். எல். ஏ., மந்திரி வரை சந்தித்து, பிச்சமூர்த்தியை அந்த பள்ளியிலிருந்து மாற்றக் கடுமையாகப் பாடுபட்டுக் கொண்டிருந்தார் புண்யகோடி.

''இதோ பார் புண்யகோடி... உன் மகன் ப்ளஸ் டூ முடிச்சுப் பரீட்சை கூட எழுதிட்டான். இப்ப போய் அந்த வாத்தியார்கிட்டே உனக்கென்ன வேலை? அவரை மாற்றி இப்ப நீ என்ன செய்யப் போறே?''

''இதோ பாரு தனிகாசலம்... இது எனக்கு ஒரு கௌரவப் பிரச்னை. இந்தப் பள்ளிக்கூடத்துக்கு வேறே ஆள் போடறதா சவால் விட்டு வந்திருக்கேன். இந்த ஊரிலே ஒண்ணு நான் இருக்கணும், இல்லே அந்த வாத்தியார்... ரெண்டுல ஒண்ணு பார்க்கப் போறேன்...''

''சரி சரி இந்தச் சின்ன விஷயத்துக்கு

க. ஒப்பிலிஅப்பன்



இப்படிக் கிடந்து புலம்பாதே. இன்னிக்கு மந்திரியைப் பார்க்கப் போறேன். இன்னிக்கே இந்த பிரச்னைக்கு ஒரு முடிவு கட்டலாம். இந்தக் கவலையை இனி மறந்துடு.. நம்ம போர்டு தேர்தலுக்கு ஆக வேண்டியதைப் பாரு...''

எம். எல். ஏ. தனிகாசலத்திடம் பேசிவிட்டு, புண்யகோடி தம் வீட்டிற்குள் நுழைய...

''அப்பா! நான் ப்ளஸ் டூ பாசாயிட்டேன்...'' என்று குமார் ஓடி வந்து தந்தையிடம் சொன்னான்.

''அப்படியா சந்தோஷம்ராஜா... மேலே என்ன செய்யலாம்...''

''பாலிடெக்னிக்ல சேர்ந்துடறேம்ப்பா...''

''சரிடா ராஜா... நான் சீட்டுக்கு உடனே ஏற்பாடுகளைச் செய்யறேன்...''

**பு**ண்யகோடி தம் மகனின் பாலிடெக்னிக் சீட்டிற்காகப் பெரிய அளவில் பொரிக்களைப் பிடித்தார். அவருடைய துரதிர்ஷ்டமோ என்னமோ, பாலிடெக்னிக் இண்டர்வியூ முழுக்க முழுக்கத் தகுதி அடிப்படையில் நடப்பதாகக் கேள்விப்பட்டார். என்ன செய்வதென்றே புண்யகோடிக்குப் புரியவில்லை. அவர் மகன் குமார் இந்தக் கவலை எதுவுமில்லாமல், நன்நடத்தை சான்றுக்காகத் தலைமையாசிரியர் அறைக்குள் நின்றுகொண்டிருந்தான்!

''குட்மார்னிங் சார்...!''

''ஓ... குமாரா... குட்மார்னிங்.. ப்ளஸ் டூ முடிச்சு என்ன செய்யப் போறே?''

''பாலிடெக்னிக் சேரலாம்னு யோசனை சார்...''

''குட் ஐடியா...''

''எனக்கு ஒரு காண்டெக்ட் சர்ட்டிபிகேட் வேணும் சார்...''

''எந்த பாலிடெக்னிக்கு அப்ளை பண்ணப் போறே?''

''அடையாறு சார்...''

''அப்படியா... அங்கே என் ஸ்டூடெண்ட் பிரகாஷ் இப்ப புரொபசரா இருக்கான்... என்னைப் பற்றிச் சொல்லு. இவில் கைடு




● பெங்களூரின் ஒரு பகுதியில் சமீபத்தில் ஒரு சாவு ஏற்பட்டு அங்கு இளைஞர்கள் வாத்தியத்திற்கேற்ப நடனம் ஆடிக் கொண்டிருந்தார்கள். வாத்தியக் கோஷ்டியிடம் கமலஹாசன் படப் பாட்டை வாசிக்கும்படிக் கமல் ரசிகர் கேட்க, ரஜினி பாட்டு வேண்டுமென ரஜினி ரசிகர் கேட்க, இதனால் மோதல் ஏற்பட்டு ஒரு கொலையே நடக்க இருந்தது.

இப்படிப்பட்ட ரசிகர்களின் வெறி வெட்கக்கேடானது. ஏற்கெனவே தமிழர்களைக் கேலி பேசும் பெங்களூரில் தமிழனின் மானம்தான் பறிபோகிறது!

ரஜினியும், கமலும் தங்கள் ரசிகர்களுக்கு இப்படி மோதிக் கொள்ளக் கூடாதென ஏன் சொல்லக் கூடாது?

— ஏ. வேணுகோபால்.




'எட்டு' (8) என்ற எண்ணை எட்டு முறை உபயோகித்து 1000 வரவழைத்தல் வேண்டும். முடியுமா?

விடை:
888
88
8
8
8
———
1000
———

— பத்மசிவாஜி

ஆ...'' என்று சொன்ன பிச்சைமூர்த்தி நன்னடத்தைச் சான்று ஒன்று எழுதிக் குமாரிடம் கொடுத்தார்.

''தாங்க்ஸ் சார்...''

''இதோ பார் குமார்... நீ நல்லபடியா படிச்சு முன்னேறணும். புரொபசர் பிரகாஷ் பத்தி உன்னிடம் சொன்னது போல, உன்னைப் பத்தி வருங்கால மாணவன்கிட்டே நான் பெருமையா சொல்லிக்கிற மாதிரி, நீ நல்ல பதவிக்கு வரணும் குட் லக்...''

இண்டர்வியூ அன்று...

''வாட்...? பிச்சமூர்த்தி சார்கிட்டே படிச்சயா? வெரிகுட்... நானும் அவர்கிட்டே படிச்சவன்தான்!''

குமார் இண்டர்வியூவை நன்றாகவே செய்தான். எப்படியும் தேர்வு செய்யப்பட்டு விடுவோம் என்ற நம்பிக்கை கூட அவனுக்கு ஏற்பட்டு விட்டது.

''அப்பா... இந்தாங்க நீங்க வாங்கிக் கொடுத்த சிபாரிசுக் கடிதங்கள்... இவைகளுக்கு வேலையே இல்லாமல் போயிடுத்து...''

''அடப்பாவி மவனே... நான் சொன்ன நபர்கிட்டே கொடுக்காமல் ஏன் வந்தே?''

''இதோ பாருப்பா... என்னை இண்டர்வியூ செய்த பிரகாஷ் என்பவர், எங்க தலைமை ஆசிரியர்கிட்டே படிச்சவர்.. நானும் அவரோட மாணவன் என்றதும் என் மீது தனி அக்கறை எடுத்துக் கொண்டார். எனக்கு கான்டெக்ட் சர்ட்டிபிகேட் கொடுக்கச்சே, என் தலைமை ஆசிரியரே தன்னைப் பத்தி பிரகாஷ்கிட்டே சொல்லச் சொன்னார்... அதனால் இண்டர்வியூவில் நான் நல்லா செய்திருக்கேன்...''

தந்தையான தன்னை விட, குமாரின் நலனில் அதிக அக்கறை காட்டிய அந்த நல்லாசிரியரிடமா நம் அரசியல் காழ்ப்புணர்ச்சியைக் காட்டினோம்...?

''என்னப்பா அப்படியே மௌனமாயிட்டீங்க, எனக்கு எப்படியும் சீட் கெடச்சுடும்ப்பா...''

''அப்படியா... இதோ இரு ஒரு நிமிஷம்... அப்பா எங்கே போகிறார் என்று புரியாமல் விழித்தான் குமார்!

''வாப்பா புண்யகோடி... உனக்கு போன் போட்டுச் சொல்லணும்னு இருந்தேன்... இதோ நீயே வந்துட்டே. நீ சொன்னபடியே உன்கிட்டே வாலாட்டின அந்த வாத்தியாரைத் தண்ணியில்லா ஊருக்கு மாத்தி ஆர்டர் போட்டாச்சு.. சந்தோஷம்தானே...?''

எம். எல். ஏ. தணிகாசலம் அட்டகாசமாகச் சிரிக்க, யாரோ பளீரென்று தம் கன்னத்தில் அறைந்தது போலிருந்தது புண்யகோடிக்கு!

# இளைய தலைமுறை!




ஃப்ராங்க்ஃபர்ட் ஏர்போர்ட் இண்டர் நேஷனல் ட்ரான்ஸிட் லௌஞ்ச். இதமான தண்மை. அதிர்வற்ற ஸிந்தடிக் தளம். ஆங்காங்கே களைப்பாறவும், கால் நீட்டி உறங்கவும் வசதியான மெத்தை ஆசனங்கள். பளிங்காய் மின்னும் குளிய லறை, கழிப்பறை வசதிகள். மணிக்கொரு முறை குப்பைத் தொட்டிகளைச் சுத்தம் செய்யும் கையுறை, காலுறை அணிந்த பணி யாட்கள். அவசியமான, அநாவசியமான பொருட்கள் வாங்க, வாங்காமல் பொழுது போக்கக்கடைகள், கடைகள், கடைகள். குடித்தனமே செய்யலாம். அத்தனை வசதி கள். பயணிகள், விமானம் மாறப் பல மணி நேரங்கள் காத்திருக்கும் இடம் என்பதால் அந்தக் குறுகிய எல்லைக்குள் ஒரு குட்டி உலகமே சஞ்சரித்தது.

அந்தப் பெண்மணியைத் திரும்பிப் பார்த் தான் அர்ஜுன். அழுது விடுவாள் போல் தோன்றியது.

''நான் ஏதாவது உதவலாமா?''

மெல்ல அவளை அணுகிக் கேட்டதுதான் தாமதம். புலம்பித் தீர்த்து விட்டாள். கண வனும் மனைவியும் அமெரிக்காவில் இரண்டு மாதச் சுற்றுப் பயணம் முடித்துத் திரும்புகிறார்கள். ஃப்ராங்க்ஃபர்ட்டில் ஒரு நாள் அவர்கள் நண்பர் வீட்டில் தங்கி ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டு அன்று நள்ளிரவு ஏர் இந்தியா விமானம் ஏறி, பம்பாய் போய்ச் சேர வேண்டும். ட்ராவல் ஏஜெண்டின் கவனக்குறைவால் அவர்களது ஜெர்மானிய விஸா இரண்டு மணி நேரத் துக்கு முன் காலாவதி ஆகி விட்டது. பத்து மணி நேரம் இடைவிடாமல் பறந்த களைப் புடன் சற்று முன் வந்து இறங்கிய இருவரை யும் ட்ரான்ஸிட் லௌஞ்சில் நிறுத்தி விட்டது இமிக்ரேஷன். இம்மியும் அசைந்து கொடுக்கவில்லை.

விஸா இல்லாததால் ஊருக்குள் செல்ல அனுமதிக்கவில்லை. இவர்களை வரவேற்க வந்த நண்பர் தகவல் ஏதும் தெரிய வழி யில்லாமல் வெளியே காத்துக் கொண்டிருப் பாரே என்ற பதற்றம். எல்லாமாக அவள் கணவன் பலராமைக் கண் மண் தெரியாமல் கூப்பாடு போடும் அளவுக்குக் கொண்டு போய் விட்டது.

சுமார் ஐந்நூறு பிரயாணிகள் நடமா டும் இடம் என்றாலும் கூட நாகரிக மிக்க மேற்கத்திய அமைதி நிறைந்த அந்தச் சூழலில் அவளது காட்டுத்தனமான கூச்சல் அவளைக் குன்ற வைத்தது ஆச்சரிய மில்லை.

''போனால் போகிறது. வெளிநாட்டுப் பிரயாணத்தில் இதெல்லாம் சர்வ சகஜம்.''

அர்ஜுன் ஆறுதல் சொன்னான்.

காலாற நடக்கலானான்.

பர்ஃப்யூம் கடை ஒன்றைக் கடக்கும் போது ''கொல்னிஷ் வாஸர்'' என்று அழைக்கப்படும் ஜெர்மானிய யூடி கோலோன் ஒரு பாட்டில் வாங்கலாம் என்று நினைத்தான். வசுந்தராவுக்கு ரொம்பப் பிடித்தமானது. ஏற்கெனவே சுங்க விலக்குக் கடையில் பெரிய ரினா ரிச்சி பாட்டில் ஒன்று வாங்கியாயிற்று.

பச்சை லேபிளும் சிவப்பு மூடியும்




ஸுஜாதா விஜயராகவன்

கொண்ட கொல்னிஷ் வாஸரை வாங்கித் திரும்பினானோ இல்லையோ, சின்னப் புயல் ஒன்று அவன் மீது மோதியது. பாட்டில் கீழே விழுந்து சுக்கு நூறாய்ச் சிதறியது. சுதாரித்துக் கொண்டு, நிமிருமுன் இரண்டு சிறுவர்கள் திகிலுடன் அவனை நோக்கி விட்டுத் தலைதெறிக்க ஓடி மறைந்தார்கள். கைக் குட்டையில் பொதிந்த உச்சிக் குடுமி முடிச்சு சர்தார்ஜிக் குழந்தைகள் என்று அடையாளம் காட்டியது.

"சை" என்று வெறுப்புப் பொங்கியது. பாட்டில் உடைந்தது கூட வருத்தமில்லை. பொது இடங்களில் குழந்தைகளை நாகரிகமற்ற முறையில் நடந்து கொள்ள அனுமதிக்கும் பெற்றோர் மேல் கோபம் எழுந்தது. கடைக்காரப் பெண்மணி அனுதாபம் தெரிவித்து விட்டு வேறொன்று எடுத்துத்தர முன் வந்தாள். அதற்கு ஐந்து டாலர் மறுபடி எடுத்து நீட்டுகையில் சட்டென்று யாரோ கையைப் பிடித்தார்கள்.

திடுக்கிட்டுத் திரும்பினான்.

"மன்னிக்கவும். தருவதற்கு என்னை அனுமதியுங்கள்" ஆழ்ந்த, கனமான குரல் ஒன்று கேட்டது. அர்ஜுனின் மறுப்பை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை.

"வாருங்கள், நண்பரே! என் பெயர்

பர்தாப் சிங். எம்மவர்கள் உங்களுக்கு ஏற்படுத்திய சிறு நஷ்டத்தை ஈடுசெய்ய நான் கடமைப்பட்டதாக உணர்கிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்.''

தாடியும், தலைப்பாகையும் பாதி மறைத்த முகத்தில் பளிச்சிடும் இரு விழிகள் சிநேகத்துடன் புன்னகை செய்தன.

உண்மையான வருத்தத்துடன் மொழிந்தவரைச் சமாதானப் படுத்தினான் அர்ஜுன்.

''நீங்கள் அவர்களைப் பஞ்சாபியர் என்று பார்க்கிறீர்கள். நான் அவர்களை என்னைப் போல் ஓர் இந்தியனாகப் பார்க்கிறேன். எனவே இந்த நஷ்டத்தில் நானும் பங்கு ஏற்கலாம்.''

''நல்லது நண்பரே. நீங்கள் இப்படிச் சொல்வது எனக்கு ரொம்பப் பெருமையாக இருக்கிறது. உங்கள் பெயரை அறிந்து கொள்ளலாமா?''

''அர்ஜுன். அர்ஜுன் ஆத்ரேயா.''

''மதராஸி?''

''இந்தியன்.''

''நல்லது. என் தவறுக்கு மன்னிக்கவும். இன உணர்வை நான் இன்னும் ஜெயிக்கவில்லை. வாருங்கள். காப்பி சாப்பிடலாமா?''

இருவரும் நிதானமாக நடந்தார்கள். வழியில் அந்தச் சிறுவர்களின் பெற்றோரைப் பார்த்து அறிவுரை சொல்லி விட்டு வந்தார் பர்தாப் சிங்.

பஞ்சாப் பல்கலைக் கழகத்தில் ஆங்கிலத் துறை ரீடராம். ஆக்ஸ்ஃபோர்ட் பல்கலைக் கழகத்தில் ஒரு செமினாரில் பேசுவதற்கு அழைப்புப் பெற்று இங்கிலாந்துக்குப் போய்க் கொண்டிருக்கிறார்.

வன்முறையாளர்களின் வெறித்தனமான தாக்குதல்களும், இங்கிலாந்தில் வசிக்கும் காலிஸ்தான் ஆதரவாளர்களும் சீக்கிய சமூகத்தையே சந்தேகத்துக்குள்ளாக்கி விட்டதற்கு வருத்தம் தெரிவித்தான் அர்ஜுன்.

''என்ன செய்வது மிஸ்டர் அர்ஜுன்? எப்பேர்ப்பட்ட இனம் எங்களுடையது! பாரதத்தைக் காக்கப் போரில் உயிரைப் பணயம் வைக்கும் முதல் படை வீரர் நாங்கள். எந்த இனத்தவராயினும் எங்கள் லங்கரில் வந்து வயிறார எப்போதும் உண்ணலாம். சகோதரத்துவம் தவிர வேறு அறியோம். ஏன் இப்படிப் பிளவுபட்டோம்?''

பெரியவர் ரொம்பவும் நொந்து கொண்டார். ''நான் கூட ஸ்டேட்ஸில் குடியேறியுள்ள இந்தியன்தான்'' என்றான்.

''நீங்கள் அன்னிய நாட்டில் குடியேறக் காரணம் என்ன என்பதை அறிந்து கொள்ளலாமா?''

''துரத்தப்பட்டேன்.''

நெருப்புக் கங்காய்த் தெறித்து விழுந்தது வார்த்தை.

''என்ன?''

''இந்தத் தேசம் எனக்கு வேண்டாம். என் ஜாதியின் பெயரால் எனக்கு உரிமைகளை மறுக்கும், என் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போடும் இந்தச் சமூகம் எனக்கு வேண்டாம். நான் போகிறேன்.''

ஆத்திரமும் அழுகையுமாக அப்பாவிடம் இருபது வருடங்களுக்கு முன் கூறியது நினைவில் இன்னும் ரணமாகவே ரத்தம் வடிய நின்றது. ரணம் வடுவாகவில்லை.

இரவு பகலாகப் பாடுபட்டுப் படித்துச் சிறப்பான மதிப்பெண்கள் பெற்றும் விரும்பிய படிப்புக்கு ஜாதியின் பெயரால் இடம் மறுக்கப்பட்டதில் இளம் வேங்கையாகத் துள்ளி எழுந்தான்.

படிப்பு முடிந்ததும் ஐ. நா. வின் உலக வங்கி இரு கரம் நீட்டிக் கை குலுக்கி அழைத்துக் கொண்டது. ஐந்து இலக்கச் சம்பளம். சர்வ வல்லமை பொருந்திய அமெரிக்க டாலரில். ஐ. நா. ஊழியன் என்பதால் வருமான வரி விலக்குப் பெற்று விள்ளாமல் விரியாமல் முழுப் பழமாகக் கையில் வந்து விழும் ஊதியம்.

பர்ஸைப் புடைக்க வைத்த க்ரெடிட் கார்டுகளால் மகிழ்ச்சியை, மனநிறைவை வாங்கித் தர முடியாது என்பது புத்திசாலியான அவனுக்கு எப்போதோ புரிந்து விட்டது.

''அன்னிய மண்ணுக்கு வந்து குடியேறியவர்களை முதல் தலைமுறை அன்போடு வரவேற்று அரவணைத்துக் கொள்ளும். அடுத்த தலைமுறைகள் தம் ஆஸ்திக்குப் பாத்தியதை கொண்டாடும் பங்காளி, தாயாதியைப் போல் ஓரக் கண்ணால் எச்சரிக்கையோடு பார்க்கும். நாளாக ஆக, மக்கள் தொகை பெருகப் பெருக, மண்ணின் வளம் குறையக் குறையப் பின்வரும் தலைமுறைகள் அவர்களை ஒண்ட வந்தவர்களாகக் கருதி அடித்து விரட்டும். வரலாறு திரும்பத் திரும்ப இதைத் தானே சொல்கிறது மிஸ்டர் அர்ஜுன்? மண்ணுக்கும், மனிதனுக்கும் உள்ள உறவு விசித்திரமானது.''

தத்துவம் பேசினார் பர்தாப் சிங், ரெஸ்டாரண்டில் நுழைந்தவாறே.

''நீங்கள் சொல்வது சரிதான். இப்போது இந்தியர்களுக்கு எதிர்ப்பு அமெரிக்காவிலும் லேசாகத் தொடங்கி விட்டது.'' என்றவாறே கோக்கோவைச் சுவைத்தான்.

சென்ற முறை தன்னோடு நியூயார்க் வர மறுத்த வசுந்தராவை நினைத்தான். க்வீன்ஸ் பகுதியில் இந்தியன் கடைகளில்

புடவையும், அப்பளாமும், இன்ன பிறவும் வாங்க எப்போதும் தன்னுடன் உற்சாகமாகக் கிளம்பும் வசுவின் கண்களில் மிரட்சி.

"வேண்டாம் அர்ஜுன். இங்கே கிடைப்பவை போதும். நீங்கள் போவதே கூட எனக்கு விருப்பமில்லை. டாட் பஸ்டர்ஸை நினைத்தால்," என்று கலங்கினாள்.

வேலை கிடைக்காத அமெரிக்க இளைஞர் குழாம் ஒன்று நெற்றியில் பொட்டிடும் இந்தியர்களைக் குறி வைத்துத் தாக்கத் தொடங்கி இருந்த நேரம் அது.

பர்தாப் சிங்கிடம் விடைபெற்று, டாய்லெட் அறை வரிசைகளின் வெளியே அர்ஜுன் உலர்த்தும் கருவியின் உஷ்ணக் காற்றில் கைகளை விரித்து நீட்டுகையில்,

"நீங்கள் தமிழர்தானே?" என்ற தமிழ்க் குரல் மகிழ்ச்சியுடன் திரும்பச் செய்தது.

மாநிறத்துக்கும் குறைவான நிறம். கலைந்த தலை. சிவந்த கண்கள். சாம்பல் நிற கார்ட்ராய் கால் சட்டை. கருநீல ப்ளேசர். இருபது வயது இருக்கலாம். பார்வையில் அச்சமோ?

"எஸ். நான் தமிழன்தான். என்ன வேண்டும் உங்களுக்கு?"

"ஐயா, தயவு செய்து தமிழில் பேசுங்கள்.. இரண்டு டாய்ஷ் மார்க் தந்து உதவ முடியுமா? மிக அவசரம்!"

"டாய்ஷ் மார்க்?"

அர்ஜுன், கோட்டில், பாண்ட்டில், பர்ஸில் தேடினான். நாணயம் மாற்றாதது நினைவு வந்தது. சில மணி நேரங்கள்தானே தங்க வேண்டும் என்பதால் மாற்றவில்லை. கடையிலும் ரெஸ்டாரண்டிலும் அமெரிக்க டாலரே எடுத்துக் கொண்டார்கள்.

"அமெரிக்க டாலர் பரவாயில்லையா?" இரண்டு டாலர் நீட்டினான்.

தயங்கினான் அந்த இளைஞன்.

"இல்லை ஐயா. தயவு செய்து டாய்ஷ் மார்க்காக மாற்றித் தருகிறீர்களா?"

"இதை நீங்களே கொடுத்து மாற்றிக் கொள்ளலாமே."

அர்ஜுனுக்கு ஒன்றும் புரியவில்லை. சட்டென்று அர்ஜுன் கையை அவன் பற்றிக் கொண்டான்.

"இப்படி வாருங்கள்."

டாய்லெட் பிரிவை விட்டு வெளியே ஒதுக்குப்புறமாக இருந்த இரு ஆசனங்களுக்கு அழைத்துச் சென்றான்.

"நான் இலங்கையிலிருந்து ஓடி வந்த தமிழன். ஃப்ராங்க் ஃபர்ட்டில் எனக்கு வேண்டியவர்கள் இருக்கிறார்கள். நான் இங்கு வந்துள்ள தகவல் தெரிந்தால் எப்படியாவது என்னை ரகசியமாக உள்ளே கொண்டு போய் விடுவார்கள். அவர்களுக்கு

## சிரிக்க வையுங்கள்: சிங்கப்பூர் செல்லுங்கள்!

காணக் கிடைக்காத வாய்ப்பு. நீங்கள் இருவர் ஜோடியாகச் சிங்கப்பூர் பயணம் மேற்கொள்ளலாம். போட்டி தரவும் வாய்ப்பு உள்ளது. அடியில் தந்துள்ள கூப்பனில் பால்பாயிண்ட் பேனாவினால் மிக அற்புதமான சிரிப்புத் துணுக்கு அல்லது ஜோக்கை எழுதி எங்களுக்கு அனுப்புங்கள். அடுத்த வருஷம் ஆகஸ்டு மாதம் இறுதி வரையில் இந்தப் போட்டியில் நீங்கள் வாரா வாரம் பங்கெடுத்துக் கொள்ளுங்கள். யாருடைய துணுக்கு அல்லது ஜோக் பெருமளவில் கல்கியில் இடம்பெறுகிறதோ, அவருக்குச் சிங்கப்பூர் பயண யோகம் உண்டு.

முடிவு தேதி: 19.11.90

ஜோக்/துணுக்கு

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

..............................

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**

# அன்று கேலி செய்தவர்கள் இன்று



இந்த வயசுல நீ இங்கிலீஷ் கத்துக்கப் போறியா என்று எனது தோழிகளும் உறவினர்களும் என்னை கேலி செய்த போது இங்கிலீஷ் கற்றுக் கொள்வது மிகவும் கடினமாக இருக்குமோ என்று நினைத்தேன்.

வேலைக்குப் போய் விட்டு வந்து, வீட்டு வேலையையும் குழந்தைகளையும் கவனிப்பதற்குத்தான் நேரம் சரியாக இருக்கிறது இந்நிலையில் இங்கிலீஷ் கற்றுக் கொள்வது எப்படி என்று சிந்தித்து வந்தேன்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இங்கிலீஷ் கற்றுக் கொள்ளலாம் என்ற விவேகானந்தா கல்வி நிலையத்தின் விளம்பரம்பார்த்தேன்.

ட்ரை பண்ணிப்பார்க்கலாம் என்று தபால்முறை பயிற்சியில் சேர்ந்தேன். ஓர் ஆசிரியர் எதிரில் இருந்து பாடங்களைச் சொல்லி கொடுப்பதைப் போல பயிற்சி முறை மிகவும் எளிய முறையில் அமைக்கப் பட்டிருப்பதால் தபால் முறைப் பயிற்சி என்ற எண்ணமே தோன்றவில்லை.

அலுவலக விஷயமாக மேலதிகாரிகளிடம் ஆங்கிலத்தில் தயக்கமின்றி என்னால் இப்பொழுது சரளமாகப் பேசமுடிகிறது. மேலும் பாடசம்பந்தமாக குழந்தைகள் கேட்கும் சந்தேகங்களுக்கு விளக்கமளிக்க முடிகிறது.

இந்த வயசுல இங்கிலீஷ் படிக்கப் போறியான்னு கேலி செய்தவர்கள் என்னிடம் ஏற்பட்டுள்ள மாற்றத்தைக் கண்டு அதிசயப்படுவதுடன் தாங்களும் இப் பயிற்சியில் சேர்ந்து பயன்பெற விரும்புகிறார்கள். விவேகானந்தா கல்வி நிலையத்தின் பணி மென்மேலும் தொடர வேண்டும் என்பதே என் விருப்பம்

Mrs. ரேகா, சென்னை-40.

நீங்களும் வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் ஆங்கிலம் எழுத, பேச பயிற்சி பெறலாம். நேர்முகப்பயிற்சியும் உண்டு. இப்பயிற்சி பற்றி மேலும் விபரமறிய கீழ்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

## விவேகானந்தா கல்வி நிலையம்

9, நடேசன் தெரு, தி. நகர், சென்னை — 17. போன்: 441216.

போன் பண்ணத்தான் இந்தக் காசு.''

பிரமிப்பில் சற்று நேரம் பேச்சே வர வில்லை அர்ஜுனுக்கு.

''ஐயா, உயிருக்குப் பயந்து நான் ஓடி வரவில்லை. ஒரு கடமையைச் சுமந்து வந் திருக்கிறேன். அதோ பார்த்தீர்களா! அந்த நீலநிற ஜீன்ஸும் சிவப்பு டாப்பும் அணிந்த வள் என் தங்கை. அடுத்தது இருக்கும் மஞ்சள் சட்டை என் பக்கத்து வீட்டுப் பெண். இல்லை! இல்லை! அவளும் எனக்கு இன்னொரு தங்கை போலத்தான். இந்த இரண்டு பெண்களையும் காப்பாற்றும் பொறுப்பு என்னை நம்பி ஒப்புவிக்கப்பட் டிருக்கிறது.''

எதேச்சையாகத் திரும்புவது போல் அர்ஜுன் அவர்களைப் பார்த்தான். பதி னாறு, பதினேழு வயது இருக்கலாம். ஒருத்தி சோபாவில் தூங்க இன்னொருத்தி பார்பரா கார்ட்லண்ட் படிக்க....

''எங்களுடைய பலவீனம் எது என்று அறிந்து கொண்டார்கள். பெண்களைக் குறி வைத்துத் தாக்கத் தொடங்கி விட்டார்கள். நாங்களாகவே நாட்டை விட்டு ஓடி விடு வோம் என்பது அவர்கள் அனுமானம்.''

பையனின் பேச்சில் ஆத்திரமோ, ஆவேசமோ இல்லாதது குறித்து அர்ஜு னுக்கு ஆச்சரியமாக இருந்தது. மேலே அவனை ஏதும் கேட்காமல் நாணய மாற்றுப் பகுதிக்குச் சென்று ஐம்பது டாலர் ட்ராவலர்ஸ் செக்கை டாய்ஷ் மார்க்காக மாற்றி நோட்டுகளும், சில்லறையுமாகப் பெற்றுக் கொண்டான்.

வழியில் ஏதோ நினைத்துக் கொண்டு கடைகளை அணுகி டோநட்டும், ஆப்பிள் பழங்களும் வாங்கினான். அவற்றை வாங்க மறுத்த பையனின் கைகளில் வற்புறுத்தித் திணித்த போது முதன் முதலாக அந்த இளைஞனின் கண்களில் நீர்ப் படலம். சட் டென்று முகத்தைத் திருப்பிக் கண்களைத் துடைத்துக் கொண்டான்.

''மிக்க நன்றி ஐயா. ப்ளேனில் கடைசி யாக நாங்கள் சாப்பிட்டு ஏழு மணி நேரம் ஆகி விட்டது. இன்னொருவரிடம் கையேந்தி எனக்கு வழக்கமில்லை. ஒரு தமிழனாவது கண்ணில் பட மாட்டானா, போன் செய்யக் காசு கிடைக்காதா என்று சுற்றிச் சுற்றி வந்தேன். ஆண்டவன் உங்களை அனுப்பித் தந்தார்.''

''நீங்கள் இந்தியாவுக்குப் போயிருக்க லாமே. ஏன் இத்தனை சிரமப்பட்டு இங்கு வந்தீர்கள்?''

''அவள் ஓர் ஏழைத்தாய். எத்தனை பேர் வந்தாலும் நிற்க நிழல் கொடுக்கும் அன்பு மனம் கொண்டவள். உண்மை. அவளுக்குச் சுமையாக நாங்கள் வந்து சேர விரும்ப வில்லை. எங்களைப் பொறுத்தவரை எங்கள் தாய்நாடு இலங்கைதான். இரவல் தாயானாலும் கூட எங்கள் தலைமுறை அறிந்த தாய் அவள்தான். இந்தப் பிரச்னை தீர்ந்த பிறகு அவளிடம் திரும்பிச் செல்லவே நாங்கள் விரும்புகிறோம்.''

''இனவெறியும், பகையும் ஒருமுறை தலை தூக்கி விட்டால் பிறகு அதை மாய்க் கவே முடியாது, மகனே! நீங்கள் இனி அந்த நாட்டில் வாழ்வது என்பது நடக்காத காரி யம்.''

தன் சொற்களின் உண்மை அர்ஜு னுக்கே கொடூரமாய்த் தொனித்தது.

உணவுப் பொட்டலங்களை ஏந்தியவாறு எழுந்து நின்றான் அந்த இளைஞன்.

''எனக்கு நம்பிக்கை இருக்கிறது ஐயா. உலக யுத்தத்தின் பயங்கரத்தை அறிந்த உங்கள் தலைமுறை இன்னொரு யுத்தம் மூளாமல் தடுக்கவும், உலக அமைதி காக்க வும் பாடுபடுகிறது அல்லவா? அதே போல் இனப் பகைகளின் கொடுமையை அனுப வித்த எங்கள் தலைமுறை இன உணர்வை அழிக்கத்தான் பாடுபடும். உலகம் சுருங்கி விட்டது! பார்க்கப் போனால் தாய்நாடு, நாட்டுப்பற்று என்ற வார்த்தைகள் எல்லாம் வழக்கொழிய வேண்டிய நாள் வந்து விட்டது. ஒரு உலகம். ஒரே இனம். எங்கள் தலைமுறையின் குறிக்கோள் அதுவாகத் தான் இருக்கும். மீண்டும் வந்தனம் ஐயா.''

அறிவிப்புப் பலகை வரிசைகள் சடசடத்து உருண்டன. பான் ஆம் ஃப்ளைட் நம்பர் 571 மேல் வரிசைக்குத் தாவி இருந் தது. அவசரமாக எழுந்து தன் பைகளை எடுத்துக் கொள்ள விரைந்தான் அர்ஜுன். பலராம் தம்பதியிடம் விடைபெற்றுத் தொலைவில் இருந்த பர்தாப் சிங்குக்குக் கை ஆட்டி விட்டு அந்த லௌஞ்சைப் பார் வையால் நாற்புறமும் துழாவினான். இளைஞனையும் பெண்களையும் காண வில்லை. உதவி கிடைத்துப் போய் விட்டார் கள் என்று ஊகித்துக் கொண்டான்.

ஓயாமல் நகரும் கன்வேயர் பெல்ட்டில் ஏறித் தொற்றிக் கொண்டு உற்சாகத்துடன் மெல்லிய குரலில் ''வீ ஆர் த வர்ல்ட், வீ ஆர் த பீப்பிள்'' என்று தனக்குத் தானே பாடத் தொடங்கினான் அர்ஜுன் ஆத்ரேயா.



''ஆபரேஷனை நினைச்சாலே பயமா இருக்கு டாக்டர்.''

''எனக்கும்தான் பயமா இருக்கு; ஆனா பயந்துக்கிட்டிருந்தா என்ன காரியம் நடக்கும். சொல்லுங்க....?''

— சீர்காழி. வி. ரேவதி.

# நேர்த்தியான தமிழில் நேருஜி!

''சாதாரணமாக ஒரு சிறுகதையை மனசில் வடிவமைத்துக் கொண்டு விட்டால், பத்துப் பன்னிரண்டு பக்கம் என்று ஒரே மூச்சில் எழுதி முடிக்க எனக்கு இரண்டு இரண்டரை மணி நேரம் போதும். ஆனால் இந்த மொழிபெயர்ப்புப் பணியில் மூழ்கியிருந்த காலத்தில் அதே பத்துப் பன்னிரண்டு பக்கம் எழுத ஐந்து மணி நேரத்திற்கு மேல் ஆனது'' என்கிறார் சிறுகதை எழுத்தாளரான ஜெயரதன். அப்படி அக்கறையுடன் அவர் மொழிபெயர்த்தது பண்டித நேருவின் 'டிஸ்கவரி ஆஃப் இந்தியா' நூலைத்தான்.

''எனக்கென்று ஒரு நடை உண்டு. அதை இப்படியொரு நூலை மொழி மாற்றம் செய்யும் போது மறந்து விட வேண்டும். மூல ஆசிரியரின் ஆன்மாவை என்னுள் வாங்கிக் கொண்டு எழுத வேண்டும். 'டிஸ்கவரி



• ஜெயரதன்

ஆஃப் இந்தியா'வை, 'தமிழ் நன்கு அறிந்த பண்டித ஜவஹர்லால்' எழுதியிருந்தால் எப்படி எழுதியிருப்பார் என்று கற்பனை செய்து பார்த்து எழுதினேன். வேத காலம் தொடங்கி சுதந்திர இந்தியா வரை, ஒரே நூலில், முழுமையான இந்தியாவைத் தரிசனம் செய்ய முடிவது இந்த ஒரு நூலில் மட்டும்தான். வரலாற்று நூல் அந்தஸ்தை இதற்கு அறிஞர்கள் தருவதில்லை என்றாலும் பண்டித நேரு தம்முடைய மிகச் சிறந்த இலக்கிய வடிவத்தில் நம்மை ஈர்த்துப் பிணித்து விடுகிறார். இந்த மொழி மாற்றத்தை நிறைவு செய்த போது இந்தியாவைப் பற்றிய எனக்கு ஒரு புதிய பிரக்ஞையே பிறந்தது. அப்போது என்னுள் திறந்து கொண்ட ஞானக் கதவுகள் பல...'' என்கிறார் ஜெயரதன்.

வரிக்கு வரி என்று சுமார் நாற்பது பக்கம் 'நேருஜி'யை மொழிபெயர்த்து விட்டுப் படித்துப் பார்த்த போது அதில் படிப்புச் சுவை ஏற்படவே இல்லையாம். குறிக்கோள், நேருவின் இலக்கியம் தமிழ் வாசகனைப் போய் அடைய வேண்டும் என்பதுதானே? மொழிபெயர்ப்பு என்ற எண்ணமே ஏற்படாமல் தமிழிலேயே சிந்தித்து எழுதப்பட்ட நூல் போல் இருந்தால்தானே ஜீவனுடன் விளங்கி இதயத்தைத் தொடும்? எழுதியதைக் கிழித்துப் போட்டு விட்டு, மறுபடி முதல் பக்கத்திலிருந்து தொடங்கினார் இவர். இம்முறை சற்றுச் சுதந்திரமாகவே செயல்பட்டார். எதிர்பார்த்த பலன் கிடைத்தது!

''அவருடைய எந்த ஒரு கருத்தையும் விட்டு விடாமலும், தவறான பொருள் தரும்படி சொல்லி விடாமலும் இருப்பதற்குத்தான் நான் மிகவும் சிரமப்பட வேண்டியிருந்தது. அதிலும் ஹிந்து, முஸ்லீம் பிரச்னைகள், வேதங்கள் பற்றி வருகிற பகுதிகளை மொழி மாற்றம் செய்யும் போது கத்தி மீது நடக்கும் உணர்வே இருந்தது'' என்கிற ஜெயரதன், இந்த நூலில் கடைசியாக மொழிபெயர்த்த சொற்கள் நூல் தலைப்புத்தான்.

மனசுக்குள் புரண்டு கொண்டேயிருந்தது, திவ்வியப் பிரபந்த வரியான, ''நான் கண்டு கொண்டேன், நாராயணா என்னும் நாமம்...'' இதுவே, 'கண்டுணர்ந்த இந்தியா' என்கிற மிகப் பொருத்தமான தலைப்பைத் தந்திருக்கிறது.

கண்டுணர்ந்த இந்தியாவில் கிடைத்த வெற்றிகரமான அனுபவம், நேருஜியின் சுயசரிதை மொழி மாற்றத்துக்கும் ஊக்கமளித்து அந்த நூலும் நிறைவடைந்து கொண்டிருக்கிறது.

இருந்தும் —

ஜெயரதன் சொல்வது... ''படைப்பிலக்கிய எழுத்தாளன் இதுபோன்ற சோதனைகளுக்கு ஆட்படக் கூடாது என்றே கருதுகிறேன். நம்முடைய சுதந்திரத்தை மறந்து விட்டுக் 'கட்டுப்பட்டு' எழுத வேண்டியிருக்கிறதே...!''

**— சுப்ர பாலன்.**

**கண்டுணர்ந்த இந்தியா — நேருஜியின் 'டிஸ்கவரி ஆப் இந்தியா' — தமிழில் ஜெயரதன். விலை ரூ. 100 — பூரம் பதிப்பகம், சென்னை — 600 033.**





# அவசர போலீஸ் 100

**பா**மர ரஞ்சகமாகப் படம் எடுப்பதில் தமக்குள்ள திறனை மீண்டும் வெளிப்படுத்தியிருக்கிறார் பாக்யராஜ்.

அதுவும், பாதி கட்டியிருந்த ஒரு வீட்டின் சில பகுதிகளை மட்டும் அப்படியே வைத்துக் கொண்டு, அதே நேரத்தில் அஸ்திவாரத்தையே மாற்றியமைத்து ஒரு புதிய மாளிகையை எழுப்பி அதை நிமிர்ந்து நிற்கச் செய்திருப்பது புதிய வெற்றி.

எம். ஜி. ஆர். சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள் ஃப்ளாஷ்பேக்கில். சாமர்த்தியமாக அங்கங்கே பரவலாக. அவருடைய இரண்டு பாடல் காட்சிகள் ரசிகர்களுக்கு டானிக்.

வீராசாமி, ராமு என்று இரட்டை வேடம் ஏற்றுள்ள பாக்யராஜின் கைவண்ணம் படம் முழுதும்.

ஒரு பக்கம் அப்பாவியான போலீஸ்காரர். இன்னொரு பக்கம், 'தப்பு என்று தெரிவதைத் தட்டிக் கேட்கத் தயங்காத' முரட்டு வாலிபன். இவர்களுக்கிடையே குழப்பம் ஏற்படாத வகையில் அமைந்துள்ள நிகழ்ச்சிகள். கும் கும் குத்துகள். குபீர் சிரிப்புகள். ஜேம்ஸ் பாண்ட் பாணி சமாசாரங்கள்.

முன்னொரு படத்தில் 'முருங்கைக் காய்' என்றால் இந்தப் படத்தில் 'புட்டு'.

எதிர்பாராத விதமாக அந்த வீட்டுக்கு வந்து சேர்ந்து விடும் ராமுவைத் தன் கணவன் வீராசாமி என்று நினைத்துக் கொண்டு சில்க் ஸ்மிதா (நல்ல வாய்ப்பு. நன்றாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.) அவருக்குப் புட்டு ஊட்டி விட முனைவதும், அப்போது நடுப்பகல் என்று கடிகாரம் நினைவுபடுத்த (அது வீராசாமிக்கு வழக்கமாக 'மூடு' வரும் நேரம்), அவரைக் கையைப் பிடித்துப் படுக்கையறைக்கு இழுத்துப் போக முயலுவதும், திண்டாடித் தவித்துப் போகும் ராமு, சில்க் ஸ்மிதாவைத் தண்ணீர் கொண்டு வரச் சொல்லி அனுப்பி விட்டுத் தப்பியோட, அந்த நேரம் பார்த்து வீட்டுக்கு வரும் வீராசாமி புட்டைக் கண்டதும் அவசர அவசரமாக அள்ளி வாயில் திணித்துக் கொள்ள, தண்ணீருடன் வரும் சில்க் ஸ்மிதா அதைப் பார்த்து விட்டுத் திகைத்து நிற்க...

படம் பார்ப்பவர் மத்தியில் ஒரே கலகலப்பு என்றால் —

ராமுவையும் வீராசாமியையும் அடுத்தடுத்துப் பார்த்து விடும் வீராசாமியின் மகன், கூடி நிற்கும் ஊர் மக்கள் மத்தியில் இரட்டை விரலை 'வி' வடிவில் உயர்த்திக் காட்டி, "இரண்டு அப்பா... எனக்கு இரண்டு அப்பா" என்று திரும்பத் திரும்பக் கூவிக் கொண்டே ஓட, வீராசாமி பிரமித்துப் போய் மனைவியை நோக்கிச் சந்தேகப் பார்வையை வீச, சில்க் ஸ்மிதாவின் முகம் அஷ்டகோணலாய் மாற...

அந்த டைப் ரசிகர்கள் மத்தியில் ஒரே ஆரவாரக் கைதட்டல்.

**நி**கழ்ச்சிகளின் தொகுப்பில் பலவீனங்கள் நிறைந்திருந்தாலும் அவற்றையே சிரிப்புக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும் சாமார்த்தியம் பளிச். இரட்டைக் குழந்தைகள் பிரிந்து போன விதம் வெளிப்படும் போது, "இதென்ன, இந்தி சினிமா ஃப்ளாஷ்பேக் மாதிரி இருக்கு!" என்று வீராசாமி வியப்பது எடுத்துக்காட்டு.

சினிமா என்கிற மீடியத்தை நன்கு புரிந்து கொண்டு, எம். ஜி. ஆருக்கு மக்களிடையே இன்றளவும் நீடித்திருக்கும் செல்வாக்கையும் புரிந்து கொண்டு, இரண்டையும் சரியான கலவையில் பயன்படுத்தியிருக்கிறார் பாக்யராஜ்.

**Master Craftsman! Maturity when?**

— சி. ஆர். கே.





# மென்பட்டு மேனி காக்க எளிய குறிப்புகள்



டாக்டர் பாரதி மரு

**கே: என் மேலுதட்டின் மேலேயும், மூக்கைச் சுற்றியும் வியர்வை அரும்புகள் உள்ளன. இதிலிருந்து நிவாரணம் பெற என்ன செய்வது?**

ப: 2-3 கிராம்புகள், ஒரு துண்டு இலவங்கப் பட்டை, 4 ரோஜா இதழ்கள், 4 துளசி இலைகள், 4 வேப்ப இலைகள் ஆகியவற்றை சேர்த்து அரைக்கவும். பாதிக்கப்பட்ட இடங்களில் இதைத் தடவவும். 15 நிமிடங்களுக்குப்பின் கழுவி விடவும்.

**கே: எனக்கு பாதத்தில் வெடிப்பு ஏற்பட்டுள்ளது. அதை எப்படி சரி செய்வது?**

ப: வீட்டிலிருக்கும்போது கூட, காலில் செருப்பு போடவும். 3 லிட்டர் வெதுவெதுப்பான நீரில் 30 கிராம் மேரிகோல்ட் எனப்படும் ஒருவகை பொன் வண்ணச் செடியையும், 2 தேக்கரண்டி ஆப்பின் சாறு புளிக்காடியையும் கலந்து அதில் தினசரி இரவு உறங்கப் போகும் முன் காலை நனைத்து அப் படியே வைக்கவும். பிறகு அது உலர்ந்தபின் ஏதாவது ஒரு காய்கறி எண்ணெயை தடவி, பழைய காலுறையை (சாக்ஸ்) மாட்டிக் கொண்டு உறங்கப் போகவும். காலையில், காலைக் கழுவி விடவும். இப்படி செய்தால் ஒரே வாரத்தில் வித்தியாசம் தெரியும்.

**கே: வடு அற்ற மெல்லிய என் சருமத்தில் கோடு கோடாக கீறல் விழுந்தது போல் உள்ளது. இதை நீக்க என்ன செய்வது?**

ப: சருமத்தின் அடிமேற்பரப்பில் பரவலாக வெடிப்பு ஏற்பட்டால், கீறல் விழுந்தது போலிருக்கும். பருவ நிலையில் திடீரென பெரும் மாறுதல் ஏற்பட்டால் இவை வெளிப்படும். மிகச் சூடான அல்லது குளிர் பானங்களைத் தவிர்க்கவும். புகை மண்டிய அறையில் இருக்க வேண்டாம். கார உணவுகளையும் தவிர்க்கவும். "மேரிகோல்டு" பூவின் பாலை கீழ்க்கண்டவாறு தயாரிக்கலாம்.

அரை லிட்டர் பாலில் .30 கிராம் மேரிகோல்டு பூவை போட்டு 8 மணி நேரம் அப்படியே வைக்கவும். அதன் பிறகு, அந்த பூவை நசுக்காமல் வெளியே எடுத்து சருமத்தில் கீறல் உள்ள இடங்களில், அப்பூவின் இதழ்களைக் கொண்டு, இதமாக தடவவும். அதே நேரத்தில் அந்தப் பாலையும் சிறிது சிறிதாக பாதிக்கப்பட்ட இடத்தில் விடவும். பிறகு, குழாய் நீரில் முகம் கழுவவும்.

**கே: கடுமையான வெயிலால் என் சருமம் சிவந்து, எரிச்சல் ஏற்படுகிறது. இதற்கு என்ன நிவாரணம்?**

ப: "லெட்டியூஸ்" எனப்படும் ஒருவகைக் கீரை இலைகளையோ அல்லது தேயிலையையோ ஒரு கப் சுடு நீரில் வேக வைத்து, பாதிக்கப்பட்ட இடத்தில் தடவுங்கள். பாதிக்கப்பட்ட இடம் மீது வெள்ளரித் துண்டு ஒன்றினையும் தேய்க்கலாம். இது உங்களுக்கு நிவாரணம் தரும்.

**கே: தினசரி பொழுது சாயும் நேரம், என் சருமம் எண்ணெய்ப் பசையாகவும், பிசுபிசுப்புடனும் ஆகி விடுகிறது. என் சருமத்தை சுத்தப் படுத்தவும், சரியாக்கவும் ஒரு வழி கூறுங்கள்.**

ப: உங்கள் சருமத்தை மலர்ச்சியுடன் வைத்திருக்க மிக மலிவான வழி-குளிர்ந்த நீரை தெளித்துக் கழுவுவதுதான். அரை கப் பன்னீரில், அரை கப் "விட்ச்-ஹேசெல்" எனப்படும் ஒரு வகை வட அமெரிக்கச் செடியின் திரவத்தைக் கலந்து வைக்கவும்.

பின்னர், பருத்திக் கம்பளியை எடுத்து, மேலே சொன்ன திரவக் கலவையில் நனைத்து கன்னம், கழுத்து, முகவாய்க் கட்டை ஆகிய இடங்களில் ஒற்றி எடுக்கவும். சரும விரிசல் உள்ள பகுதிகளில் இதைப் பயன்படுத்தாமல் தவிர்க்கவும்.





# எண்சாண் உடம்புக்குச் சிரசே பிரதானம்!

ஐம்புலன்களுள் தொடு உணர்வு உடலின் எல்லாப் பாகங்களிலும் பரவியிருந்தாலும், மற்ற நான்கு புலன்களையும் சிரத்திலேதான் கொண்டு வைத்திருக்கிறான் ஆண்டவன் என்பதைக் காணும் போது, 'எண் சாண் உடம்புக்குச் சிரசே பிரதானம்' என்ற வசனம் எவ்வளவு பொருத்தமானது என்பது புரியும். சிரசாசனம் செய்யும் போது ஏற்கெனவே விவரித்த நற்பலன்கள் தவிர, இந்த நான்கு புலன்களுக்கும் பெரும் நன்மைகள் ஏற்படுகின்றன.

சிரசாசனம் செய்யும் போது கண்களுக்கு ரத்தம் நன்கு பாய்வதால் அதன் தசைகள், நரம்புகள், சவ்வுகள், திரைகள் முதலியன எல்லாம் சுகமடைந்து பலம் பெறுகின்றன. சிரசாசனத்துடன் சேர்ந்து கண் பயிற்சிகளையும் செய்து வரலாம் — ஆனால் இவற்றை நிபுணர்களை நேரில் சந்தித்து ஆலோசனை பெற்றுச் செய்வதே நல்லது. கண்ணாடி அணிய ஆரம்பித்தவர்கள் கூடச் சிரசாசனம் செய்து வந்தால் கண்ணாடியின் 'பவர்' எத்தனை ஆண்டுகள் ஆனாலும் அதிகரிக்காமல் ஒரே நிலையில் இருப்பதை உணர்வார்கள்.

கண்களுக்கு ஆரோக்கியம் அளிப்பது போலவே செவிகளுக்கும் சிரசாசனம் பலமளிக்கும். இ. என். டி. டாக்டர் என்று, மூக்கு — தொண்டை — காது ஆகிய மூன்றையும் இணைத்துத்தான் நிபுணர் பார்க்கிறார் என்பதிலிருந்தே இம்மூன்றுக்கும் உள்ள தொடர்பு தெரிய வரும். ஜலதோஷம் பிடித்தால் சிலருக்குக் காதும் அடைக்கும்; வலி ஏற்படும். சிரசாசனம், பிராணாயாமம் முதலியவை செய்து வருகிறவர்களுக்கு ஜலதோஷம், மூக்கடைப்பு, சைனஸ், காது வலி போன்றவை கிட்டத்திலேயே வராது.

அடுத்தது வாய். பற்கள் சுத்தமாகவும் ஆரோக்கியமாகவும் இல்லையென்றால் பற்களுடன் போகாது; உடலின் பல்வேறு பாகங்களிலும் அதனால் கோளாறுகள் உண்டாக வாய்ப்புண்டு என்று கண்டறிந்திருக்கிறார்கள். தலைவலி, வயிற்று வலி என்று டாக்டரிடம் போனால், அவர், 'பல் வைத்தியரிடம் போய்ச் சுத்தம் செய்து கொண்டு வா' என்று கூறினால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஆனால் சிரசாசனம் செய்வோருக்கு இதுபோன்ற பிரச்னைகள் இல்லை. சிரசாசனத்தின் நற்பலன்கள் செயல்பட, ஈறுகள், பற்கள் கெட்டிப்படும். எத்தனை வயதானாலும், பற்கள் விழாது. இத்துடன் உணவருந்திய பின் வாயைப் பற்பசை போட்டுக் கழுவிச் சுத்தமாக வைத்திருந்தால் பல் டாக்டரிடம் போகவே நேராது. துர்நாற்றம் வீசாது. பொய்ப்பல் செட்டுக்கு அவசியமே இராது. சிரசாசனம் செய்யும் போது இரு பல்வரிசைகளையும் நுனியில் ஒன்றோடொன்று பொருத்தி, இலேசாகக் கடித்து, அழுத்தம் கொடுத்தால் ரத்தம் அதிகம் பாய்ந்து ஈறுகள் கெட்டிப்படும். இதை ஐந்தாறு தடவை செய்தால் போதும், வாய் மூடிய நிலையிலேயே இருக்க வேண்டும்.

சிரசாசனம் செய்து வந்தால் ஐம்புலன்களும் ஆரோக்கியமாக விளங்கி மகிழ்ச்சி தரும் என்றாலும் ஆரம்ப சாதகர்கள், ஒரு வேளை ஜலதோஷம், இருமல் இவற்றால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தால் சிரசாசனம் செய்யக் கூடாது. ஏனெனில் சிரசாசனம் செய்யும் போது தும்மவோ, இருமவோ, கொட்டாவி விடவோ கூடாது. இது குளிக்கப் போய்ச் சேறு பூசிக் கொண்ட





கதையாகிவிடும். எனவே உடம்பைக் கவனித்துக் குணப்படுத்திக் கொண்டு பிறகு தான் சிரசாசனமும் மற்ற ஆசனங்களும் பழக ஆரம்பிக்க வேண்டும். ஆசனங்கள் பழக ஆரம்பித்த சில காலத்துக்கெல்லாமே ஆரோக்கியம் அதிகரிப்பதையும், அதனால் ஆனந்தம் ஏற்படுவதையும் உணரலாம். அப்புறம் ஆசனங்கள் நோய்களை அண்ட விடாமல் நம்மைக் காக்கும்.

செவிக் கோளாறு ஏற்கெனவே உள்ளவர்கள், எடுத்த எடுப்பில் சிரசாசனம் பழகக் கூடாது. நிபுணர்களைக் கலந்தாலோசித்து வேறு பல ஆசனங்களைப் பழகி, பிறகு மெல்ல மெல்லச் சிரசாசனத்துக்கு வர வேண்டும்.

சிரசாசனம் வேண்டிய நேரம் செய்து கீழே இறங்க ஒன்று அல்லது ஒன்றரை நிமிஷம் பாக்கியிருக்கும் போது, அத்துடன் இணைந்ததாக இன்னொரு ஆசனம் செய்யலாம். அதாவது, சிரசாசன நிலையிலிருந்தபடியே கால்களை மட்டும் முழங்கால் பகுதியில் மடக்கி, முழங்கால்களை இரு பக்கங்களிலும் இன்னும் பக்கவாட்டில் அகட்டிக் கொண்டு, மலத்துவாரத்தைச் சுருக்குவது போல் உள்ளுக்கிழுக்க வேண்டும். அப்போது மூச்சை விடவேண்டும். பிறகு மலத்துவாரத்தை விரிக்க வேண்டும். அப்போது மூச்சை இழுக்க வேண்டும். மலத்துவாரம் ரொம்ப அதிகமாக விரிந்து சந்து ஏற்பட்டு விடாமல் கவனித்துக் கொள்ள வேண்டும். ஆரம்பத்தில் மேற்சொன்ன மாதிரி கணக்காக மூச்சை இழுக்கவும் விடவும் வராது. மாறிப் போகும். ஆனாலும் கவனம் செலுத்தினால் இரண்டு மூன்று நாட்களில் சரியாகச் செய்ய வரும்.

இந்தப் பயிற்சியைச் செய்ய வேண்டுமானால் ஆசனத்துக்கு முன்பே மல விசர்ஜனம் செய்து விட வேண்டும். பொதுவாகவே ஆசனம் பழகுமுன் காலைக் கடன்களை முடித்து விடுவதே நல்லது. மேலும் சிரசாசனத்தை ஆடாமல் அசையாமல், சுவர் உதவியின்றி ஐந்து நிமிஷமேனும் செய்யப் பழகியவர்கள்தான் இந்த ஆசனத்தைச் செய்யலாம்.

இந்த ஆசனத்துக்கு "அசுவினி முத்ரா" என்று பெயர். ஏன் அப்படிப் பெயர் வந்தது என்றால், குதிரை சாணம் போட்டபின் மலத்துவாரத்தைச் சுருக்கவும் விரிக்கவும் செய்யும். இம்மாதிரி பத்துப் பதினைந்து தடவை கூடச் செய்யும். எனவே அந்தப் பெயரை இதற்கு வைத்தார்கள். அருவருப்பு அடையாமல் யோசித்தோமானால், இந்தப் பயிற்சியினால், மிகப் பெரிய பலன்கள் கிடைப்பதை உணரலாம். இதைச் செய்து வருகிறவர்களுக்கு மலச்சிக்கல் என்பது கிடையவே கிடையாது. அதன் பின் விளைவுகளான வயிறு மந்தம், தலைவலி, துர்நாற்றத்துடன் வாயு பிரிவது போன்ற உபாதைகள் எதுவுமே இராது. அதுமட்டுமல்ல, மூலம், பவுத்திரம் போன்ற வியாதிகளின் பரம விரோதி இந்த அசுவினி முத்ரா. அவற்றை முளைக்க விடாமல் தடுத்துவிடும். ஏற்கெனவே உள்ளவர்களுக்குக் குணப்படுத்தவும் செய்யும். ஆனால் வியாதி உள்ளவர்கள் நிபுணர்களைக் கலந்தாலோசிக்க வேண்டும். வியாதி இல்லாதவர்கள் தாராளமாகச் செய்து இந்தத் தொல்லைகளிலிருந்து தற்காத்துக் கொள்ளலாம். நரம்புத் தளர்ச்சி என்ற நாமதேயமே இவர்களுக்கு இராது.

எத்தனையோ விதமான ஆசனங்கள் இருக்கின்றன. ஆனால் அவை எல்லாவற்றையும் நம்மால் செய்து கொண்டிருக்க முடியாது. மற்ற ஆசனங்களை நிபுணர்களுக்கு விட்டு விட்டு இந்தத் தொடரில் விவரிக்கப்பட்டிருக்கும் ஆசனங்களை மட்டும் இளைஞர்கள் செய்து வந்தாலே போதும்; வாழ்நாள் முழுவதும் ஆரோக்கியமாகவும் ஆரோக்கியம் தரும் ஆனந்தத்துடனும் வாழலாம்.

**(முடிவுரையாகச் சிலவற்றை அடுத்த இதழில் கூறி விடைபெறுவேன்.)**

# சினிமாவில் சந்தேகமா? தீர்த்து வைப்பார் ஆனந்தன்!



பத்திரிகை அலுவலகங்களில் திரை உலகத்தைப் பற்றிய சந்தேகம் ஏதேனும் தோன்றுமானால் தீர்த்துக் கொள்ள எல்லோரும் அணுகுவது ஆனந்தனைத் தான். ஒவ்வொரு படத்தைப் பற்றியும், பல்வேறு திரையுலகப் புள்ளிகள் பற்றியும் ஏராளத் தகவல்கள் மட்டுமல்லாமல், 1931ல் இருந்து வெளிவந்த தமிழ்ப் படங்களின் புகைப்படங்களையும் அவைகளின் கதைகளையும் வைத்திருக்கிறார்.

ஆனந்தன் சேகரித்து வைத்திருக்கும் திரையுலகத் தகவல்களுக்கும், புகைப்படங்களுக்கும் பலமுறை ஆபத்தும் வந்திருக்கிறது! ஒரு கசப்பான சம்பவத்தைக் கூறுகிறார்:

''பிலிம் சேம்பருடன் எனக்கு 1958ல் இருந்தே தொடர்பு உண்டு. 'திரையுலகின் 50 வருடம்' என்ற கண்காட்சி நடத்தப் பணம் தருவதாக வாக்களித்தார்கள் சேம்பர்காரர்கள். ஆனால் ஒரு கண்டிஷன் போட்டார்கள். அதாவது கண்காட்சியில் வைக்கப்படுகின்றவற்றையெல்லாம், பின்னர் அவர்களிடமே ஒப்படைத்து விட வேண்டும் என்பதுதான் அது! இது எப்படி இருக்கு? நான் அரும்பாடுபட்டுச் சேகரித்தவை விலைமதிக்க முடியாதவை அல்லவா? 'நீங்களும் வேண்டாம், உங்கள் பணமும் வேண்டாம்' என்று அவர்களை உதறி விட்டு, திரை உலகப் பிரமுகர் ஒருவர் உதவியுடன் நானே கண்காட்சியை நடத்தினேன். 50,000 மக்களுக்கு மேல் கண்டுகளித்தார்கள்.''

அதற்குப் பின் பல கண்காட்சிகளை நடத்தி விட்டார் ஆனந்தன். திரை உலகைப் பற்றி ஆராய்ச்சி செய்து பட்டம் வாங்கியவர்கள் ஆனந்தனை அணுகாமல் இருந்திருக்க முடியாது.

ஆனந்தனுக்குப் பத்திரிகை உலகு பற்றியும் கொஞ்சம் குறை உண்டு. பலர் இவர் தரும் தகவல்கள், புகைப்படங்களைப் பயன்படுத்துகிறார்கள். ஆனால் பணம் தருவதில்லை. 'குறைந்தபட்சம் என் பெயரை யாவது போடலாமே' என்று வருத்தப்படுகிறார்.

பல வருடங்களுக்கு முன்னர் திரை உலகத்தினரின் முகவரிகளைத் தெரிவிக்கும் டயரி ஒன்றைப் போட்டார் ஆனந்தன். அதற்காக வங்கியில் கடன் வாங்கியிருந்தார். அந்த டயரி வெளியான மூன்று மாதங்களுக்குப் பின்னர் பணத்தைத் திருப்பித் தருவதாக வங்கியுடன் உடன்பாடு. டயரி வெளியீட்டு விழாவின் போது வந்திருந்த நடிகர்கள், தயாரிப்பாளர்கள் எல்லாம் 'நான் ஆயிரம் நன்கொடையாகக் கொடுக்கிறேன்' 'ஐயாயிரம் கொடுக்கிறேன்' என்றெல்லாம் பந்தாவாக அறிவிப்பு மட்டும் செய்து விட்டுப் போய் விடடார்கள். மறுநாள் பத்திரிகையில் ''இவ்வளவு ரூபாய் நன்கொடை வசூல்'' என்று செய்தி வந்து விட்டது. அவ்வளவுதான், வங்கியில் பிடித்துக் கொண்டார்கள்! 'கடன் வாங்கிய பணத்தை உடனே கட்டு' என்றார்கள்.

''ஸார். அவர்கள் மேடையில் பேசியதோடு சரி. இதுவரை பணம் கொடுக்கவில்லை'' என்று ஆனந்தன் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் மானேஜர் நம்பவில்லை.

''அப்புறம் என் வீட்டை அடகு வைத்து வங்கிக்கடனை அடைத்தேன்'' என்று சிரித்துக்கொண்டே கூறுகிறார் ஆனந்தன். இது போன்ற கசப்பான அனுபவங்கள் கூட அவரைச் சோர்வடையச் செய்வதற்குப் பதில், மேலும் உற்சாகத்துடன் பணியாற்றச் செய்வதுதான் ஆச்சர்யம்.

சந்திப்பு: **ப்ரியன்**



# 4 சிகரங்களை

தங்கள் தவம் கலைக்கப்பட்டது கண்டும்
இதுவரை வாங்கிய வரம் அழிக்கப்பட்டது
கண்டும் துடித்துப் போன தூண்டில்காரன்
திருஞானம் மீது
தீயாய்ப் பற்றினான்.

இடக் கன்னத்தில் ஓர் இடி இறங்கியது;
செவிப்பறைக்குள் பூச்சிகள் கத்தின.

இன்னோர் இடி வலக்கன்னத்தில்
வந்து விழுந்தது;
கண்ணுக்குள் ஆயிரம் மின்னல்கள்
அறுந்து விழுந்தன.

போதும்.

ஒரு கன்னத்திலடித்தால் மறுகன்னம்
காட்டலாம்.

இரு கன்னத்திலும் அடித்தால்...?

காட்டுவதற்கு இனிமேல் கன்னம் ஏது?

இறங்கிய மூன்றாம் இடியை இடக்கரம்
தடுத்தது.

''தூண்டில்காரர்களே!
மீன்கள் நல்லவைகள்; ஒருநாளும்
அவைகள் மனிதனுக்குத் தூண்டிலிட்ட
தில்லை.
மீன்கள் வல்லவைகள்.
உங்களால் தண்ணீரில் சுவாசிக்க முடியுமா?
நீங்கள் முரண்பாட்டு மூட்டைகள்,
மனிதர்களைக் கரைசேர்க்க முடியாத நீங்கள்
மீன்களைக் கரையேற்றுகிறீர்களே!
நீங்கள் புழுவைக் காட்டி மீன்களை
ஏமாற்றுகிறீர்கள்.
இந்தியத் தண்டனைச் சட்டம் இதனைக்
குற்றமென்று குறிக்கவில்லை.
ஆனால், உங்கள் இதயத்தின் சட்டம்...?''

''நிறுத்து! வேட்டை என்பது இங்கே
மலைமக்கள் கலாசாரம்.''

''இல்லை! வேட்டை என்பது விலங்கு
களின் கலாசாரம். உழைக்க
மறுப்பவைகளே வேட்டையாடும்.
வேட்டை என்பது எளியதன் மீது
வலியதன் ஆதிக்கம். அருவி முடிந்த
இடத்தில் நதி ஆரம்பமானது. வேட்டை
முடிந்த இடத்தில் நாகரிகம் ஆரம்ப
மானது. நீங்கள் எப்போது மனிதனாக
ஆரம்பமாகப் போகிறீர்கள்?''

''நீ யார்?
எங்கள் மூலிகைத் தோட்டத்தில்
கஞ்சாச் செடியாய் முளைத்த அந்நியன்
நீ யார்?''

''உங்களுக்கு மட்டுமில்லை — எனக்கு
நானே அந்நியன்தான்.
இந்த மண்ணில் ஒரு நட்சத்திரமாய் விழுந்து
மின்மினியாய் உலவிக் கொண்டிருப்பவன்.
நுரைகளைக் கரைகளில் ஒதுக்கும் நதி மாதிரி
உறவுகளால் நிராகரிக்கப்பட்டவன்.
தொலைந்துபோன நேற்றுகளை இன்றுகளில்



# நோக்க...

வைரமுத்து

தேடிக் கொண்டிருப்பவன்.
கடிதங்களுக்கு முத்திரை குத்தும்
அஞ்சல்காரர்
மாதிரி உணர்ச்சியில்லாமலே
நேற்றுவரை உயிர் வாழ்ந்தவன்.
இதோ! இந்த ஜீவபூமியைச் சிநேகித்து
வந்திருக்கிறேன்.
இங்கே அவிழ்ந்து கிடக்கும் வாழ்க்கையை
அள்ளிக் கொள்ள வந்திருக்கிறேன்.
என் கண்களின் வழியே உயிரை
ஊற்றிக் கொள்ள வந்திருக்கிறேன்.
வாழ்க்கை என்ற ஜீவநதிக்கு வெளியே
விழுந்து கிடக்கும் மனிதமீன்களைப்
பிரவாகத்தோடு பிணைத்துவிட வந்திருக்கிறேன்.
உங்களைப் புண்படுத்துவது என் நோக்கமல்ல.
கல்லைக் காயப்படுத்துவதா சிற்பியின்
நோக்கம்...?
வாருங்கள்.
என் கன்னத்தில் கைகள் செய்த
காயத்திற்கு உங்கள் உதட்டில் மருந்திருக்கிறது.
உங்கள் உதட்டில் முத்தம் மிச்சமிருந்தால்
என் கன்னத்தில் இன்னும் இரண்டு முறை
அடிக்கலாம்.''

நதியில் மழை விழுந்தது.
இதயத்தில் கூடாரம் கட்டிய கோபம்
கண்ணீர் என்ற ஏணி வழியே இறங்கி
வெளியேறியது.

ஒவ்வொருவராய் வந்து கைகுலுக்கினார்கள்.

ஒவ்வோர் உள்ளங்கையிலும்
பதமாய்ப் பரவியது நட்பின் வெப்பம்.

''யார் நீங்கள்?
காம்பின் கறுப்பு பழம் பழுத்திருப்பதைச்
சொல்வது மாதிரி — உங்கள் கண்ணீர்
உங்கள் மனம் பழுத்திருப்பதைச்
சொல்கிறதே —
நீங்கள் யார்?''

''நாங்கள் எங்கள் கிராமத்தின்
முதல் பட்டதாரிகள்.
மீனுக்காகத் தண்ணீரிலும், வேலைக்காகக்
கானல்நீரிலும் தூண்டிலிட்டுக் கொண்டிருக்கிறவர்கள்.''

''ஓ! தவம் செய்ததால் சபிக்கப்பட்டவர்களா?

வெட்டப்பட்ட நகம் மாதிரி
உங்களோடு வாழ்க்கை ஒட்டாதிருக்குமே!
எல்லாப் பருவங்களிலும் உங்களுக்குப்
பகலைவிட இரவு நீளமாய் இருக்குமே!
உறவுகள் தீவுகளாகுமே!
ஏதாவது ஒரு கரம் — குறிப்பாய் ஒரு
வளையல் கரம் — தலைகோதி விடாதா
என்று மனசு தத்தளிக்குமே!
தாய்ப்பாலுக்கு ஏங்கும் குழந்தை மாதிரி
மனசு தபாலுக்கு ஏங்குமே!
காதலின் ஒரு தோல்வியை மறக்க

நிருபர்: ஏற்கெனவே விவாகரத்துப் ப
ண்ணவரையே மறுபடியும் கல்யாண
பண்ணிக்கப் போறீங்களாமே?
நடிகை: போன தடவை அவ
சரியாப் புரிஞ்சிக்கிறதுக்கு முந்தியே,
விவாகரத்துப் பண்ணிட்டேன், அத
னாலதான்...!''

வி. ரேவ

இரண்டு அல்லது மூன்று முறை தொடர்ந்து
காதலித்துத் தோற்றிருக்க வேண்டுமே!
உங்கள் குடும்பத்தில் எல்லோரும்
தூங்கியபின் உள்ளே நுழைந்து, அவர்கள்
விழிப்பதற்குள் வெளியேறிவிடத்
தோன்றுமே!''

''ஆமாம்! ஆமாம்!
எப்படித் தெரியும் எங்கள் கதை உங்க
ளுக்கு?''

''சமுத்திரம் உப்பென்று மீனுக்குத்
தெரியாதா?

நானும் உங்கள் ஜாதிதான்.''

அவர்கள் முகங்களில் ஆச்சரிய வெளி
ச்சம் அடித்தது.

நீங்களும் எங்கள் ஜாதியா?
அப்படியானால் — தேர்தலின் போது
மட்டுமே

தேசப்படத்தில் தோன்றி மறையும் இந்த
மலையூத்துக்கு வந்த மர்மமென்னவோ?''

''வாழ்க்கையின் மர்மம் தேடி வந்தேன்.
இயற்கை எழுதிய மூலங்களுக்கு உரையெழுத
வந்தேன்.
பிச்சைக்காரர்களே! கொஞ்சம் குனிந்து
பாருங்கள். உங்கள் காலடியில் தங்கக்
காசுகள் என்று கண்டு சொல்ல வந்தேன்.
'தாகம் வரும்போதெல்லாம் வானம்
பார்க்கும்
மனிதா! உன் வீட்டைச் சுற்றி நீரோடை
பார்' என்ற

நிஜம் சொல்ல வந்தேன்.
மனித வாழ்க்கை மூளையோடும்
வயிற்றோடும்
முடிந்து விடுகிறது.
அது இதயங்களை நோக்கி ஏறவேயில்லை.
கற்காலப் பள்ளத்தில் கிடக்கும்
மனிதர்களைப்
பொற்காலச் சிகரத்தில் ஏற்ற புஜம்
கொடுங்கள்

தோழர்களே!
இங்கே விலங்குக்கும் மனிதர்க்கும்
வித்தியாசக் கோடே இன்னும் கிழிக்கப்
படவில்லை.

இந்தக் காடுகள் விலங்குகளின்
உணவுச்சாலை;
மனிதர்களுக்கும் அவ்வளவுதான்.

இந்தக் காடுகள் விலங்குகளின் குடியிருப்பு
வாரியம்;
மனிதர்களுக்கும் அதேதான்.

ஆறு மணிக்குமேல் விலங்குகள்
இனப் பெருக்கத்திற்காக மட்டுமே
விழித்திருக்கின்றன;
மனிதர்களும் அப்படித்தான்.

விலங்குகள் பூப்பறிப்பதில்லை.

விலங்குகளுக்குப் பௌர்ணமியில்லை.
விலங்குகள் கலை பயில்வதில்லை.
இங்கே மனிதர்களும் அப்படித்தான்.

இதுவரை இவர்கள் இதயம் ஆணிகளால்
மட்டுமே அலங்கரிக்கப்பட்டிருக்கிறது;
இனியாவது பூக்களால் அர்ச்சிப்போம்.

என்னை உங்களோடு அழைத்துச் சென்று
ஊர் காட்டுங்கள்.

இங்கே முளைக்க வந்திருக்கிற விதைநான்;
இந்தப் பூமிக்கு என்னை அறிமுகப்படுத்
துங்கள்.''

கிளையிலிருந்து விழுந்த கிளிக்குஞ்சைக்
கொண்டுபோவது மாதிரி அவர்கள்
அவனைப்
பத்திரமாகவே அழைத்துப் போனார்கள்.

●

அங்கொன்றும் இங்கொன்றுமாய் லட்சத்
தீவுகளாய்ச் சிதறிக் கிடக்கும் குடில்கள்.

ஊருக்கு அமுதசுரபியாய் ஒரே ஒரு
டீக்கடை.

மழையில் மட்டுமே குளிக்கும் மனிதர்கள்.

பாலித்தீன் பைகளில் மழைக் கோட்டு
தயாரித்துக் கொண்ட சிறுவர்கள்.

எல்லோர் கண்களிலும் எதையோ இழந்த
பார்வைகள் — அநேகமாய் அது
வாழ்க்கையாய்
இருக்கலாம்.

தூரத்து மேட்டில் ஒரு தகர வீட்டில் அழுகுரல்
கேட்டது.

''அங்கே என்ன அழுகை?''

''நேற்று வரை காடு வெட்டிக் கொண்டிருந்த
எழுபத்தாறு வயது இடும்பன் இறந்து
விட்டார்.''

''மரணமென்றால் அழ வேண்டுமா?
மரணத்துக்கு அழுவது அறியாமை.
மழைத்துளி மண்ணோடு சங்கமிக்கிறது;
மேகம் அழுகிறதா?



நதி கடலோடு சங்கமிக்கிறது.
மலை அழுகிறதா?
உடல் இயற்கையோடு சங்கமிக்கிறது;
மனிதன் மட்டும் ஏன் அழுகிறான்?''

●

காலிஃப்ளவர் காடு கடந்து, பிளம்ஸ்
மரங்களைத் தாண்டிக் கொடிகளைப் பிடித்துக்
கொண்டே குறுக்குப்பாதை வழியே சரிவுகளில்
ஏறிய போது —
ஒதுங்கியிருந்த ஒரு மூங்கில்
வீட்டிலிருந்துஇன்னோர்அழுகுரல்கேட்டது.

''என்ன... என்ன இது இங்கேயும் அழுகை?
என் வருகைக்காக இந்த ஊரே
துக்கம் கொண்டாடுகிறதா? இல்லை... இங்கேயும்
ஒரு மரணமா?''

''மரணமில்லை திருஞானம்; ஜனனம்.''

''ஜனனமா? ஜனனத்துக்கும் அழுகையா?''

''ஆமாம். பிறந்த பெண் குழந்தைக்காய்ப்
பெற்றோர் அனுசரிக்கும் துக்கம் அது.
இங்கே ஆண் குழந்தைக்கு மட்டுமே தாலாட்டு;
பெண் குழந்தைக்கு ஒப்பாரிதான்.''

''அய்யகோ, மனிதர்களே! அழப் பிறந்தவர்களே!
நீங்கள் விந்தில் ஜனித்தவர்களா?
இல்லை, கண்ணீரில் ஜனித்தவர்களா?

உங்கள்
பிறப்பும் துக்கம்;
இறப்பும் துக்கம்;
இருப்பும் துக்கம்.

சர்வம் துக்கமயம் ஜகத்.

மகிழவே மாட்டாயா மனிதா?
தயவு செய்து சிரி.
மகிழ்ச்சியை மரணத்திலிருந்தே ஆரம்பி.''

●

இரவு பனித்துளிகளால் வைத்துவிட்டுப்
போன புள்ளிகளில் சூரியன் வந்து கோலம் போடும்
அதிகாலை.

மூங்கில் வீட்டு முற்றத்தில் தோழர்களோடு
திருஞானத்தின் மௌன மாநாடு.

''ஒரு முடிவுக்கு வருவோம்.
எல்லோரும் சேர்ந்து இயக்கமாவோம்.
துக்கம் கொண்டாடும் ஜீவன்களுக்காக நாம்
துக்கம் கொண்டாட வேண்டாம்.
மனிதர்களுக்கு நாம் மனித விலாசம் தருவோம்.
இன்னும் வாழப்படாத ஒரு வாழ்க்கையை
வாழ்ந்து காட்டுவோம்.
நிலாவின் கிரணங்களில் ஆடை நெய்து
கண்ணீரைத் துடைத்து விடுவோம்;
வேர்வையைத் துவட்டிவிடுவோம்.
முதலில் பௌர்ணமியை இவர்களுக்குப்
பாராயணம் செய்து வைப்போம்.
இந்த ஊரில் உயரமான இடம் எது?''

''உச்சிப் பாறை''

''நாளைதான் பௌர்ணமி. இந்த ஊரையே
உச்சிப் பாறைக்கு ஊர்வலமாய்
வரச் சொல்வோம்.
ஆண்களும் பெண்களும் குழந்தைகளுமாய்
நிலா உதிக்கும் நிமிஷத்தில் ஜோராய்
ஒருமுறை கைதட்டுவோம்.
விடிய விடிய விழா நடத்துவோம்;
உழைத்த களைப்பு உஷ்ணமாகட்டும்.
துருப்பிடித்த புலன்களைத் துலக்கி விடுவோம்.
வாருங்கள் தோழர்களே!
ஊருக்குள் உலாப் போவோம்.
பௌர்ணமி பார்க்க வாருங்கள் என்று
பறைகொட்டுவோம்.
எந்தக் கதவையும் தட்ட வேண்டாம்;
ஏனென்றால் இங்கே பல வீடுகளுக்குக்
கதவுகளே இல்லையே.

●

அந்த உச்சிமேட்டிலிருந்து ஐந்தருவிகளாய்
இறங்கினார்கள்.

ஆவேசம்கொண்டவர்களாய் ஆடினார்கள்.
ஆகாயம் கேட்கப் பாடினார்கள்.

தெருக்களில் — தேயிலைத் தோட்டங்களில் —
பேரிமரத் தோப்புகளில் — உருளைக்கிழங்குக்
காடுகளில் உழைக்கும் மக்களோடு
உற்சாகமாய்ப் பாட்டுப் பாடிப் பரவினார்கள்.

''வேர்வை விற்கும் தோழர்களே! — முழு
வெண்ணிலா பார்ப்போம் வாருங்களே!
பார்வை தொலைத்த மனிதர்களே — ஒரு

பௌர்ணமி பார்ப்போம் வாருங்களே!

●

தோட்டம் செதுக்கிய தோழர்களே — விதி
துவைத்துப் பிழிந்த மனிதர்களே!
நீட்டிப் படுத்த கிழவர்களே — அட
நிலவை அழைப்போம் வாருங்களே!

●

தூக்கம் கொண்டது கால்வாசி — நாம்
துக்கம் கொண்டது கால்வாசி!
ஏக்கம் கொண்டது கால்வாசி — இதில்
இருக்கும் காலம் கால்வாசி.

●

கவலையை எட்டித் துரத்துங்கள் — என்
கவிதையை நெஞ்சில் நிறுத்துங்கள்
தவளை வாழ்க்கை வாழாமல் — சில
தவங்கள் புரிவோம் வாருங்கள்.

●

உச்சிப் பாறை அழைக்கிறது — ஓர்
ஓவியம் நடக்க விருக்கிறது.
மிச்சம் உள்ளது வாழ்க்கைஎன்றே — ஒரு
மின்னல் பூமியில் துடிக்கிறது.

●

பிள்ளைகள் பெரியவர் பேதமில்லை — அட
பெண்களோ ஆண்களோ கேள்வியில்லை
தொல்லைகள் துயர்கள் மீதமில்லை — ஒரு
ஜோதியில் கலப்போம் தூரமில்லை.

●

கொள்ளை நிலவில் கூடுங்கள் — சிறு
கும்மியடிப்போம் வாருங்கள்.
பிள்ளைவயதுக் கண்கொண்டு — இந்த
பிரபஞ்சத்தைப் பாருங்கள்.

●

அங்கங்கே மனிதர்கள் விறைந்து விறைத்து
நின்றார்கள்; வெறிக்க வெறிக்கப்
பார்த்தார்கள்.
ஊருக்குள் ஒரு பைத்தியம் வந்து படித்த
இளைஞர்களையும் பைத்தியங்களாக்கி
விட்டதென்று
சில பைத்தியங்கள் பேசின!

— இன்னும் செல்வேன்



* துரைசாமி — பாக்யராஜ்

முடங்கி விட்டதால், என்னுடைய விநியோக பிஸினஸையும் அது வெகுவாகப் பாதித்து விட்டது. இமாலய நஷ்டத்திலிருந்து நான் மீள வழியின்றித் தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தேன். தோட்டத்துக்குப் போய், எம். ஜி. ஆரைச் சந்தித்தேன். ''நான் பார்த்துக்கறேன்! கவலைப்படாதே!'' என்று அவர் கூறிய வார்த்தைகள் பெரிய ஆறுதலை ஏற்படுத்தியது.

சில மாதங்கள் சென்றன. எம். ஜி. ஆரிடமிருந்து படம் சம்பந்தமாய் யாதொரு தகவலும் இல்லையாதலால், மறுபடி தோட்டத்துக்குப் போனேன். ''படத்தை முடித்துத் தருவதெல்லாம் முடியாத காரியம்! வேறு

# அவசர போலீஸ் தயாரிப்புக்கு எம்.ஜி.ஆர். எப்படி உதவினார்?

மெர்க்காராவில் ஷூட்டிங். எம். ஜி. ஆர். லதாவுடன் டூயட் பாட, ஒரு பாடல். ஷூட்டிங் முடிவடைந்த நிலையில், சட்டமன்றத்துக்குத் தேர்தல் அறிவிப்பு வந்து விடவே, ஷூட்டிங்கை மூட்டை கட்டச் சொல்லி விட்டு, சென்னைக்குப் புறப்பட்டு விட்டார் எம். ஜி. ஆர். 'அண்ணா நீ என் தெய்வம்' என்ற பெயரில், ஸ்ரீதரின் டைரக்‌ஷனில் ஆரம்பித்த அந்தப் படம் அதோடு நின்று போய் விட்டது.

அப்போது எம். ஜி. ஆர். நடித்து ஸ்ரீதர் இயக்கிய 'உரிமைக் குரல்' சக்கைப் போடு போட்டுக் கொண்டிருந்தது. தொடர்ந்து, தென்காசியைச் சேர்ந்த சங்கரன், ஆறுமுகம் என்ற இருவர், எம். ஜி. ஆர். — லதா காம்பினேஷனில், ஸ்ரீதரை இயக்க வைத்து, 'அண்ணா நீ என் தெய்வம்' என்ற படத்தை எடுக்கத் திட்டமிட்டு பூஜை போட்டனர். படத்துக்கு ஃபைனான்சியர், மதுரையில் சினிமா விநியோகம் மற்றும் தயாரிப்பில் ஈடுபட்டிருந்தவரான துரைசாமி.

துரைசாமி சொல்கிறார்: ''எம். ஜி. ஆர். அரசியலுக்கு வந்து விட்டதால், படம் தடைபட்டுப் போனது. தயாரிப்பாளர்களால் ஒன்றும் செய்ய முடியாத நிலைமை. படம் சுமார் ஐயாயிரத்து ஐநூறு அடி மட்டுமே எடுக்கப்பட்டிருந்தது. எடுக்கப்பட்ட வரையில் படத்தின் சுருளை என்னிடம் ஒப்படைத்து விட்டு, அதன் நெகடிவ் உரிமைகளையும் எனக்கே எழுதிக் கொடுத்து விட்டு, தயாரிப்பாளர்கள் ஒதுங்கி விட்டார்கள். என்னுடைய பெரிய அளவிலான தொகை இந்த அரை குறைப் படத்தில்

ஏதாவது உதவி தேவையா?'' என்றார். எனக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல், ''பரவாயில்லை! வேறு எந்த உதவியும் வேண்டாம்!'' என்று கூறி விட்டு வந்து விட்டேன்.

அதன் பிறகு, ஒரு நண்பர் மூலமாய், பாக்யராஜின் அறிமுகம் எனக்குக் கிடைத்தது. அவரிடம் பேசும் போது பேச்சுடன்



* பூஜை போட்ட தினத்தில் எம். ஜி. ஆருக்குத் துரை சாமி மாலை போட்டு மகிழ்கிறார்.



"என்னங்க, நம்ம பொண்ணு யாரையோ காதலிக்கிறா?"

"எப்படித் தெரிஞ்சது?"

"பேசினா கண்டல் வாசம் மூக்கைத் துளைக்குதே!"

— ஆர். ரத்தினசாமி.

பேச்சாக, 'தலைவரின் படம் பாதியிலே நின்னு போச்சு!' என்ற போது நண்பர் பாக்யராஜிடம், 'இவருக்கு எப்படியாவது உதவ முடியுமா? என்று பாருங்களேன்' என்று கூறினார். உடனே பாக்யராஜ் அதுவரை எடுக்கப்பட்டிருந்த படத்தின் பகுதியைப் பார்க்க விரும்பினார். போட்டுக் காட்டினேன். அதைப் பார்த்து விட்டு, மூன்று நாள் கழித்து வரச் சொன்னார். அப்போது ஒரு கதை சொன்னார்..."

"குறுக்கிடுவதற்கு மன்னியுங்கள். அண்ணா நீ என் தெய்வம் படத்தின் ஒரிஜினல் கதை என்ன?" என்று கேட்ட போது துரைசாமி சொன்னார்:

**எ**ம். ஜி. ஆரின் தங்கை சங்கீதா. அவர் ஒரு மலைவாசஸ்தலத்தில் வசிக்கிறார். அங்கேயுள்ள ஒரு எஸ்டேட் முதலாளி வி. எஸ். ராகவன். அவரது பெண் லதா. லதாவினுடைய மாமா நம்பியார். பல பெண்களையும் மயக்கி அனுபவித்து விட்டுக் கை கழுவி விடும் கேரக்டரான நம்பியாரின் வலையில் சிக்கும் சங்கீதா தாயாகிறார். அந்தக் குழந்தைக்கு அப்பா யார் என்று கண்டுபிடித்து, லதாவைக் காதலித்து, தான் லதாவைத் திருமணம் செய்து கொண்டு, சங்கீதாவை, நம்பியாருக்குத் திருமணம் செய்து வைக்கிறார் எம். ஜி. ஆர்.

வழக்கமான எம். ஜி. ஆர். பாணிக் கதைதான்.

படத்தின் எடுக்கப்பட்ட பகுதிகளைப் பார்த்த பாக்யராஜ், முழுக்க முழுக்க ஒரு ஆக்ஷன் ஹீரோ கதையே சொல்லியிருக்கிறார். அதாவது, தாம் நடிக்காமல் டைரக்ஷன் பொறுப்பை மட்டும் ஏற்பது போல. துரைசாமி, எம். ஜி. ஆரிடம் போய் விவரம் சொல்ல, பாக்யராஜை வரச் சொல்லியிருக்கிறார் எம். ஜி. ஆர். எல்லாரும் தோட்டத்துக்குப் போயிருக்கிறார்கள். எம். ஜி. ஆர். பாக்யராஜிடம், "உன்னால்தான் அந்தப் படத்தை முடிக்க முடியும். எனக்கு அந்த நம்பிக்கை இருக்கிறது. இன்னும் அதிகமாக அதில் உன்னை ஈடுபடுத்திக் கொள்" என்று சொல்ல, பாக்யராஜும் ஒப்புக் கொண்டு விட்டார்.

அப்புறம்தான் இரட்டை வேடக் கதையாய் அமைக்க முடிவு செய்யப்பட்டது. "அப்பாவி கான்ஸ்டபின் பாக்யராஜ், ஆக்ஷன் ஹீரோ பாக்யராஜ் இரண்டு பேருக்கும் ஏற்ற வகையில் சுவையான திரைக்கதை ஒன்றை மறுபடியும் எழுதினார் பாக்யராஜ். அண்ணா நீ என் தெய்வத்தில் நடித்த நம்பியார், வி. எஸ். ராகவன், சங்கீதா ஆகியோர் மகிழ்ச்சியுடன் 'அவசர போலீஸ் 100' படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டனர் என்றாலும், லதாவை அணுகிய போது, "தான் திருமணமாகி செட்டில் ஆகி விட்டதால் நடிப்பதற்கில்லை" என்று கூறி விட்டார்.

**அ**மெரிக்காவில் சிகிச்சை முடிந்து எம். ஜி. ஆர். சென்னை திரும்பிய பின் 'அவசர போலீஸ் 100'க்கு ஏ. வி. எம். ஸ்டுடியோவில் எம். ஜி. ஆர். குத்து விளக்கு ஏற்றி வைக்க, பூஜை நடந்தது. (அந்தக் காட்சிகளையும் படமெடுத்து அவசர போலீஸ் படத்தின் டைட்டிலில் இணைத்துள்ளார்கள்.)

சுமார் 5550 அடி எடுக்கப்பட்ட 'அண்ணா நீ என் தெய்வம்' படத்தின் காட்சிகளிலிருந்து, அவசர போலீஸ் கதைக்கு 3750 அடி காட்சிகளை மட்டுமே பயன்படுத்தி இருக்கிறார்கள். படத்தின் மொத்த நீளமோ பதினாலாயிரம் அடி. எம். ஜி. ஆர். இடம்பெறும் சண்டைக் காட்சிகள் இல்லை என்பதால், ஆக்ஷன் ஹீரோவாய் வரும் பாக்யராஜுக்குச் சில சண்டைக் காட்சிகளை அமைத்துள்ளார்கள்.

"பூஜை போட்ட படத்தை முடிக்க பாக்யராஜ் ஏன் கிட்டத்தட்ட நான்கு ஆண்டுகள் எடுத்துக் கொண்டார்?"

"ஏற்கெனவே ஒப்புக் கொண்ட படங்களை முடித்து விட்ட பின் இந்தப் படத்தை எடுத்துக் கொண்டதாலும், எடுக்கப்படும் படம் எம். ஜி. ஆருக்கு எந்த விதத்திலும் இமேஜ் பாதிப்பு ஏற்படாத வகையில் அமைய வேண்டும் என்பதால் அதிக சிரத்தை காட்டியதாலும்தான் தாமதம்."

"சென்சார் தொல்லை இருந்ததாகப் பத்திரிகைகளில் செய்தி வந்ததே!"

"சென்சார் பிரச்னை ஏதுமில்லை. 'யூ' சர்டிபிகேட் தர சில காட்சிகளை வெட்டச் சொன்னார்கள். அதை 'கட்' செய்யாமல் 'ஏ' சர்டிபிகேட் வாங்கிக் கொண்டு விட்டோம்."

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**

# போட்டாரே, ஒரு போடு!



• வி. பி. சிங்கைப் பிரதமர் பதவியிலிருந்து வேண்டுமானால் அகற்றி விடலாம்; ஏழை மக்களின் இதயத்திலிருந்து ஒரு போதும் நீக்க முடியாது.

— வி. பி. சிங்.

• என்னையும், வி. பி. சிங்கையும், அடுத்த 500 ஆண்டுகளுக்கு மக்கள் வாழ்த்திக் கொண்டே இருப்பார்கள்.

— ராம் விலாஸ் பாஸ்வான்.

• நான் பதவியில் இல்லாமல் இருந்திருந்தால், பணவீக்கத்தை எதிர்த்து நானும் போராடிக் கொண்டிருப்பேன்!

— மதுதண்டவதே.

• பிரிட்டனின் தலைமை நீதிபதிக்கு, இந்தக் கதி ஏற்பட்டிருந்தால், இந்தியாவின் முதல்தர மருத்துவ நிபுணர்கள் அனைவருமே, சிகிச்சையளிக்க வரவழைக்கப்பட்டிருப்பார்கள்!

— லண்டன் மருத்துவமனை வராந்தாவில் காத்திருந்த நேரத்தில், தம் மனைவியிடம் மறைந்த சுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதி சபய சாசி முகர்ஜி.

• என்னுடைய வாழ்க்கை, நடிகர் என்ற முறையில் சரிவைக் கண்டு கொண்டிருக்கிறது.

— அமிதாப்பச்சன்.



• அவர் சரியான விளம்பரப் பிரியர்; ஒவ்வொரு முறை டெலிவிஷனில் தோன்றும் போதும் ஒவ்வொரு மாதிரி உடையணிந்து கொண்டு தோன்றுகிறார்.

— சதாம் உசேன் பற்றி, குவைத்திலிருந்து தப்பி வந்த ஒருவர்.

• நான் நடிக்கும் படங்கள் தோல்வி கண்டால், அதற்கு என்னையே காரணமாய்க் கூறிவிடுகிறார்கள்.

— மீனாட்சி சேஷாத்திரி.



• பரபரப்பு வேண்டி, என்னைக்கொல்லக் கூடப் பத்திரிகைக்காரர்கள் தயங்க மாட்டார்கள்!

— பி. டி. உஷா.

• உஷா மிகச் சிறந்த அதலெட்; ஆனால் அவர் தம் திறமையின் உச்சத்தில் இருந்த சமயத்திலேயே ரிடையர் ஆகி இருக்க வேண்டும்.

— அஸ்வினி நாச்சப்பா.

• பெண்கள் விஷயத்தில் நான் எக்ஸ்பர்ட் இல்லை.

— கிரிக்கெட் வீரர் அசாருதீன்.

தொகுப்பு: ஜூலி.

**சிரிக்க வையுங்கள்;
சிங்கப்பூர் செல்லுங்கள்!**

50

# ராஜாவின் பார்வை ராணியின் பக்கம்!



ஒரு பெரியவர் ரிக்ஷாக்காரனிடம் பேரம் பேசிக் கொண்டிருந்தார்.

"பஸ் ஸ்டாண்ட் வரை போக எவ்வளவு கேட்பாய்?"

"முதல் வகுப்பு ரூ. 5, இரண்டாம் வகுப்பு ரூ. 4, மூன்றாம் வகுப்பு ரூ. 3!" என்றான்.

"இதென்ன? ரிக்ஷாவில் வகுப்பு எப்படி?"

"முதல் வகுப்பு — நல்ல மெத்தை சீட் போட்டுக் குலுங்காமல் அழைத்துச் செல்வேன்." இரண்டாம் வகுப்பு, கடின குஷன் போட்டுக் கரடுமுரடான பாதையில் அழைத்துச் செல்வேன்..."

மூன்றாம் வகுப்பு இதைவிட மோசமாக இருக்கப் போகிறது என்று பெரியவர் வண்டி ஏற முற்பட்டார். அப்போது, ரிக்ஷாக்காரன், "யோவ், எதுக்குய்யா உட்காரப் போறே? நான் உட்கார்ந்துக்குவேன். நீ வண்டி இழு- அதுதான் மூன்றாம் வகுப்பு!" என்றான்!

— கே. பாலாஜி, ஹைதராபாத்.

● கல்லூரி கேண்டீனில் நண்பன் "ஆம்லெட் சாப்பிடு" என்றான். "நான் சைவம்" என்று மறுத்தேன். "என்னடா 'ஜுவாலஜி' படித்துக் கொண்டு, சைவம் என்று டபாய்க்கிறே!" என்றான். அருகிலிருந்த மற்றொரு நண்பன் அவனை நோக்கி, "நீயும்தான் கெமிஸ்ட்ரி படிக்கிறே; அதுக்காக 'ஆஸிடா' குடிக்கிறே!" என்று கூற, நாங்கள் கொல்லெனச் சிரிக்க, நண்பனின் முகத்தில் டன் கணக்கில்!...

— க. நா. க. நெடுஞ்சேரலாதன், இடையூர்.

• • •



**மனைவி:** காப்பிப் பொடி வாங்கும் போது மட்ட ரகத்திலும் கொஞ்சம் வாங்குங்க!

**கணவன்:** ஏன்?

**மனைவி:** இரவல் கேட்கிறவங்களுக்குக் கொடுக்கத்தான்!

— அ. இராமநாதன், சிதம்பரம்.



● ஆபீஸ் விஷயமாக டில்லி சென்ற போது என் மேலதிகாரி ஒரு கேஸ் ஸ்டவ் வாங்கிவரச் சொன்னார். வாங்கிவந்தபின், கலர், மாடல் நன்றாக இல்லை என அவர் வாங்க மறுத்து விட்டார். "அவர் சொன்னதால்தான் என் பணம் ஆயிரம் ரூபாய் போட்டு வாங்கி வந்தேன்" எனக் கூறியும் பயனில்லை. சோர்வுற்ற எனக்கு, என் நண்பன் ஓர் அருமையான யோசனை கூறினான். அதன்படி

அடுத்த மாதம் அந்த மேலதிகாரி ஓய்வு பெற ஒரு வாரம் முன்பு அவருடைய பிரிவுபசார விழாவிற்கு ஆபீஸ் முழுவதும் ஆயிரம் ரூபாய் பணம் கலெக்ட் செய்தேன். மற்றவர்களுடைய அனுமதியுடன் கேஸ் ஸ்டவ்வை அழகாக பாக் செய்து விழாவில் அந்த மேலதிகாரிக்கே பரிசளித்து விட்டோம். பிரித்துப் பார்த்ததும் அவர் முகம் போன போக்கு...!

— கே. கண்ணன், சென்னை.



''தமிழில் 'வீக்'காக இருக்கிலேன்னு 100 தடவை இம்போசிஷன் எழுதச் சொன்னால், 60 தடவைதானே எழுதியிருக்கே...?''

''நான் கணக்கிலேயும் வீக் சார்...!''

— எஸ். சுப்ரமணியன், சென்னை — 10.

• • •

● திருவள்ளுவர் பேருந்தில் வரும்போது எனது முன்புறமாக இருக்கையின் மேலே பெட்டிகள் வைக்கும் இடத்திலிருந்து, பேருந்தின் வேகமான அசைவின் காரணமாக ஒரு பெட்டி நகர்ந்து முன்புறம் இருந்தவரின் தலையில் விழுந்து விடுவது போல் இருந்தது. நான் உடனே சத்தமாக அவரிடம், ''சார், மேலிருந்து பெட்டி விழுந்துவிடும் போலிருக்கிறது'' என்றேன். அதற்கு அவர், ''பெட்டி என்னுடையது இல்லை'' என்றார். நான், ''ஆனால் தலை உங்களுடையது தானே!'' என்றதும், உடனிருந்த பயணிகளின் சிரிப்பு அடங்க வெகு நேரமாகியது!

— வே. அருண், நாகர்கோவில்.

• • •

● பள்ளி நினைவு துளிர்க்கிறது. தமிழாசான் யாப்பிலக்கணம் பற்றி விளக்கிக் கொண்டிருந்தார். மாணவிகளைச் சீண்டிப் பலவித தண்டனை பெற்ற நடேசன் என்ற மாணவன் எழுந்து, ''மூளையைக் குழப்பும் இந்த யாப்பிலக்கணத்தால் என்ன பயன்? இவ்வளவு நாளாய் இதைப் போதிக்கும் உங்களால் கவிதை, நினைத்த மாத்திரத்தில் புனைய முடி



யுமா?'' என்று ஏளனமாகக் கேட்டான். தமிழாசான் அமைதியாக, ''முடியும்'' என்றார். அடுத்த கணம் வெண்கல ஓசையில் வெண்பா ஒலித்தது:

பெண்டிர்களைப்பார்த்தாலேபோதும்நடேசா உன்
கண் காய்கை கரகாட்டம் ஆடுவதேன்?
அன்றொருநாள்
தாசில்தார் மகள் முகத்தில் தான்ராக்கெட்
விட்டதற்குப்
பூசையடி போதலையோ சொல்!

— சி. நாச்சிமுத்து, ஈரோடு — 4.



தரகர்: ஐம்பது சவரன் நகை, ஒரு லட்சம் ரொக்கம், சீர்வரிசையோட ஒரு பொண்ணு இருக்குன்னு சொன்னேனே, யோசனை செய்தீங்களா?

மாப்பிள்ளை: யோசிச்சுப் பார்த்தேன். பொண்ணு இல்லாம நகையும் பணமும் மட்டும் தருவாங்களான்னு கேட்டுப் பாருங்களேன்.

— எம். எம். அஷ்ரப் அலி, மணப்பாறை.

• • •

● நான் பத்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்த போது, ஒருநாள், தமிழாசிரியர், வேற்றுமை உருபுகளை விளக்கிக் கொண்டிருந்தார். கடைசி வரிசையில் அமர்ந்திருந்த என் நண்பனிடம், ''ஐந்தாம் வேற்றுமை உருபு என்ன? உதாரணம் ஒன்று கூறு!'' என்றார். உடனே அவன், ''ராஜாவின் பார்வை ராணியின் பக்கம்'' என்று பாட, வகுப்பறை 'கொல்'லென்று போயிற்று!

— அ. இராசேந்திரன், சென்னை — 71.

# எஸ்.எஸ்.எம். பைனான்ஸ்

பதிவு அலுவலகம்: 24/103 வடக்கு காந்திபுரம், குமாரப்பாளையம்-638 183
சேலம் மாவட்டம், தமிழ்நாடு, இந்தியா.
தொலைபேசி: 04288 2811 லிருந்து 2815 வரை தந்தி: 'ESSESEM' டெலக்ஸ்: 08502-202 SSM-IN

# பொதுமக்கள் டெபாசிட் திட்டம்

## திட்டம் I குறுகிய கால டெபாசிட்டுகள்

| குறைந்தபட்ச டெபாசிட் ஏற்புத் தொகை | காலம் | ஆண்டு வட்டி விகிதம் |
|---|---|---|
| ரூ.2000/- (கூடுதல் டெபாசிட் தொகை ரூ.1000-த்தின் மடங்குகளில்) | ரொக்கம் 15 நாட்களுக்குப் பிறகு வாங்கிக் கொள்ளும் டெபாசிட் | 12% |
| | 3 மாதம் | 14% |
| | 6 மாதம் | 15% |

## திட்டம் II பிக்சட் டெபாசிட்

| குறைந்தபட்ச டெபாசிட் தொகை | காலம் | ஆண்டு வட்டி விகிதம் |
|---|---|---|
| ரூ. 5,000/- (கூடுதல் தொகை ரூ.1,000/-த்தின் மடங்குகளில்) | 1 ஆண்டு | 16% |
| | 2 ஆண்டு | 17% |
| | 3 ஆண்டு | 17.5% |
| | 4 ஆண்டு | 18% |

## திட்டம் III குமுலேட்டிவ் பிக்சட் டெபாசிட்

| டெபாசிட் தொகை | காலம் | ரூ. 5,000/- டெபாசிட் செய்தால் காலம் முதிர்வடையும் போது கிடைக்கும் தொகை | ரூ.1,000/- டெபாசிட் செய்தால் காலம் முதிர்வடையும் போது கிடைக்கும் தொகை | வருட இலாப வட்டி விகிதம் |
|---|---|---|---|---|
| ரூ. 5,000/- (கூடுதல் தொகை 1000/-த்தின் மடங்கு) களில் | 2 ஆண்டு | ரூ.7,008/- | ரூ.1,402/- | 20.08% |
| | 3 ஆண்டு | ரூ.8,420/- | ரூ.1,684/- | 22.80% |
| | 4 ஆண்டு | ரூ.10,217/- | ரூ.2,043/- | 26.09% |

**முக்கிய அம்சங்கள்**

● டெபாசிட்டுகளுக்கான வெளியூர் காசோலைகள் அதற்கு சமமான ரொக்கத்தில் ஏற்றுக்கொள்ளப்படும். ● குமாரப்பாளையம்/பவானி ஆகிய இடங்களில் ரொக்கமாக மாற்றிக்கொள்ளக்கூடிய வகையில் பொதுவான வங்கிக் கட்டணங்களை கழித்துக் கொண்டு டிமாண்ட் டிராப்ட்டுகளை டெபாசிட்தாரர்கள் அனுப்பலாம். ● ஓராண்டுக்கான பின்தேதியிட்ட MICR வட்டி வாரண்டுகள் முன்னதாகவே அனுப்பப்படும். ● பாரத ஸ்டேட் வங்கியின் எல்லா கிளைகளிலும் வட்டி வாரண்டுகளை சமர்ப்பித்து அதற்கு இணையான ரொக்கத்தைப் பெற்றுக் கொள்ளலாம். ● எங்களுடைய தலைமை அலுவலகம்/கிளைகளில் காசோலைகள்/டிமாண்ட் டிராப்டுகள் பெறப்பட்ட தினத்திலிருந்து வட்டி கணக்கிட்டு வழங்கப்படும். ● பிக்சட் டெபாசிட்டுக்கான வட்டி மாதந்தோறும்/காலாண்டுக்கு ஒருமுறை/அரையாண்டுக்கு ஒரு முறை/ஆண்டுக்கு ஒருமுறை மற்றும் டெபாசிட் காலம் முதிர்வடையும் போதும் வழங்கப்படும். ● டிமாண்ட் டிராப்ட்டுகளின் மூலமாகத்தான் முதலைத்தொகை திரும்பி கொடுக்கப்படும்.
● நிதிநிலையாண்டு காலத்தில் ஆண்டு வட்டித்தொகை ரூ.2,500 வரையில் இருக்குமானால், அதற்கு வருமான வரி பிடித்தம் ஏதும் இல்லாமல் வட்டித்தொகை வழங்கப்படும்.



**எஸ்.எஸ்.எம். பைனான்ஸ் நிம்மதியளித்திடும் நிதி நிறுவனம்**

# ஒற்றுமைக்கு வழிவகுக்கும் தலையங்கம்!

''நேற்றைய ஒரு தவறை இன்றைய ஒரு தவறின் மூலம் சரிப்படுத்திவிட முடியாது'' என்ற வாசகங்கள் நல்லெண்ண அடிப்படையில் இந்து — முஸ்லிம் ஒற்றுமைக்கு வழிவகுக்கும் நோக்குடன் எழுதப்பட்டிருந்த தங்களின் தலையங்கத்தில் ஒளிவீசும் தாரக மந்திரங்கள்.

தக்கோலம், ஆ. புகாரி.

• இராமஜென்மபூமி — பாபர் மஸ்ஜித் பிரச்னையிலே தலைவிரோதகப் போய்க் கொண்டிருக்கும் இவ்வேளையில் அமரர் கல்கி அவர்களின் சிவகாமியின் சபதத்தில் மகேந்திர சக்கரவர்த்தி ''நாலு பெரிய சமயங்களுக்கும் நாலு கோவில்களை அர்ப்பணம் செய்யப் போகிறேன்'' என்ற வாக்கியத்தை இன்றைய அரசியல்வாதிகளும் மதவாதிகளும் படித்தால் நல்லது. சமய ஒற்றுமையை, சமயச் சண்டைகள் அதிகமாக இருந்த அந்தக் காலத்திலேயே மகேந்திரர் வளர்த்திருப்பது நம் மனத்துக்கு இன்பம் தரும். அதே வேளையில் இன்றைய நிலையை நினைத்தால்...?

புவனகிரி — 1, ச. அருட்செல்வன்.

• இந்த வாரம் ''சிகரங்களை நோக்கி'' வீசிய கவிதைச் சூரியனின் வார்த்தைக் கதிர்கள்! எனது நெஞ்சப் பயிருக்கு இதமாய் இருந்தது!

நகட்டூர், சிதை. கருணாநிதி.

• 'சரியாய்ப் போடாத சாமியார் வேஷம்!' என்ற சின்னத் தலைப்பைக் கொடுத்து விட்டு என்ன படம் என்று போடாமல் விட்டு விட்டீரே. அது ஏன்? அடிக்கடி படம் பார்க்கிறவர்களுக்குத்தான் அந்தத் தவறு நடந்த படம் 'இணைந்த கைகள்' என்று தெரியும். தவறைச் சுட்டிக்காட்டி விட்டுப் படத்தின் பெயரைச் சொல்லாமல் கோட்டை விட்டு விட்டீர்!

மன்னார்குடி, ஏ. சாகுல் அமீது.

• 'யார் சார் அந்த அண்ணாச்சி அருமைநாயகம்? வேஷ்டி, சட்டையுடன் கேரள உச்சரிப்புடன் அலட்டிக் கொள்ளாமல் நடித்து வைத்து அசர வைக்கின்றாரே' என்று எழுதியுள்ளீர். ''இவ்வளவு படங்களுக்கு விமர்சனம் எழுதிய விமர்சகருக்கே தெரியவில்லையே என்ற வியப்பு என்னுள் ஏற்பட்டது. அவர் வேறு யாருமல்லர். ''சாணக்யன்'' படத்தில் மந்திரியாக நடித்தாரே. ''திலகன்'' சாட்சாத் அவர்தான் அந்த ''அருமைநாயகம்.''

சென்னை — 52, எஸ். ராதாகிருஷ்ணன்.

• தொழு நோயாளியை மனதார விரும்பி மணம் செய்து பத்து ஆண்டுகளுக்கு மேலாக, அவருடன் வாழ்ந்த பிரான்ஸ் தேசத்து ராதா கணவனைப் பிரிந்து சென்றதற்கான காரணம் எதுவாக இருப்பினும் பிரிவுக்கு அவர் கணவனே பெரும்பங்கு வகிக்கிறார். மூடிகோபியாக இருக்கும் பெண் பத்து ஆண்டு காலம் நல்லவிதமாகக் குடும்பம் நடத்தி இருக்க முடியவே முடியாது.

தஞ்சாவூர், — 7, ஆசைத்தம்பி.

• ரத யாத்திரை — தலையங்கம் கண்டேன். நம் நாட்டில் முஸ்லிம் மக்கள் சிறுபான்மையோர் என்று பட்டம் சூட்டி இந்துக்களுக்கு இல்லாத சலுகைகள் வழங்கப்பட்டுள்ளது. அயோத்தி ராமர் கோவில் பாபர் என்ற மன்னரால் இடிக்கப்பட்டது என்பதும் உண்மையே! நம் நாட்டில் நாம் மதிக்கும் ஸ்ரீராமர் கோவில் கட்டச் சிறுபான்மையோராக இருக்கும் முஸ்லிம் மக்கள் ஏன் அனுமதி தரக் கூடாது? பல சலுகைகள் அனுபவிக்கும் இவர்கள்தான் ஏன் விட்டுத் தரக் கூடாது? சரித்திரம் தெரிந்திருக்கும் நீங்கள் கூட இப்படித் தலையங்கம் எழுதியிருப்பது வருத்தமாக இருக்கிறது.

கும்பகோணம், — 1, ஆர். ஸ்ரீதரன்.

• ''ராஜாஜி பற்றிக் கலைஞர் எழுதியவை உண்மையல்ல'' என்ற கட்டுரையை வெளியிட்டு உண்மையை நிரூபித்து விட்டீர்கள். ஓய்வு பெற்ற பி. எம். நாராயணசாமி போன்று துணிந்து உண்மையை உலகம் அறியச் செய்ய மக்கள் முன்வருதல் வேண்டும்.

வேலூர், — 9, எம். மகேஸ்வரி.

• காதல் விழுதுகள் கதை மூலம் காதலின் ஒரு புதிய பரிமாணத்தைக் கண்முன் கொணர்ந்து விட்டார் வையவன்.

ஈரோடு, — 11, கே. பி. கணேஷ்பாபு.

• புத்தகங்களையும், விபூதிப் பிரசாதங்களையும் அரிய பரிசாக வழங்கும் இந்தக் காலத்தில் மரக்கன்றுகளைத் திருமணப் பரிசாகக் கொடுக்கும் பெ. தங்கசாமி அவர்களின் செயல், பாராட்டத்தக்கதாகும்.

வேலூர், — 6, பொ. பொற்செல்வன்.

• கல்கி 28.10.90 இதழில் 'கலகலத்துக் கொண்டிருக்கும் கர்நாடக காங்கிரஸ்'' நேரடி ரிப்போர்ட் ராஜீவின் 'தான்தோன்றித்தனமான' அரசியல் நடவடிக்கையை மட்டுமின்றி, நியாயமான ஒரு மக்கள் தொண்டன் அரசியல் களனில் நிம்மதியாகக் காலம் கழிக்க முடியாது என்பதையும் தெளிவாக உணர்த்தியது.

திருச்சி, — 4, தாயு. செந்தில்குமார்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# புத்துணர்ச்சியும் பொலிவும் வழங்கும் ஹமாம்!



கண்டுகொள்வீர் ஹமாம் புரியும் ஜாலத்தை,
இதுவரை காணாத கூடுதல் புத்துணர்ச்சியும்
பொலிவும் உமக்கு. புதுமை குன்றாமல்
நீடித்துக் கமழும் நறுமணம். சொகுசான
நுரைவளம்—வழங்கும் என்றும் புதுமையான
ஹமாம். புத்துணர்ச்சியையும்
பொலிவையும் உணருவீர்.

## ஹமாம்

குடும்ப சோப்




பாட்டா தயாரிப்பு

CLARION/B/T/23/173 TAM

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka




## ஜண்டு பாம்

## ஜலதோஷம், தலைவலி மற்றும் நோவுகளை நொடியில் நீக்குகிறது.

காலை முதல் மாலை வரை ஓயாத ஒழியாத வேலை. கூடவே ஜலதோஷத்தின் தொல்லையும் சேர்ந்து விட்டால் சங்கடந்தான். எனவேதான் ஜண்டு பாம். ஜலதோஷம் நீங்கலாக, தலைவலி, முதுகுவலி, இடுப்பு வலி, உடல்வலி மற்றும் சுளுக்கு வலிகளிலிருந்தும் குணம் அளிக்கிறது.

மற்ற பாம்களோடு ஒப்பிடும்போது ஜண்டுபாம் கூடுதல் வீரியம் கொண்டது. நிறமற்றது. எனவே கறை படியுமோ என்ற பயமில்லை. பிசுபிசுப்பற்றது. அதனால் வீட்டிலோ, வெளியிலோ உபயோகிக்கலாம். நறுமணமும் கொண்டது. கொஞ்சமாக உபயோகித்தாலே போதும். அதனால் சிக்கனமானது. மிருதுவான சருமத்திற்கும் இதமானது. ஆகவேதான் தாய்மார்கள் தங்கள் குடும்பத்தினருக்கு ஜண்டுபாமையே தடவ விரும்புகிறார்கள்.

சீசாவின் மேல் இருக்கும் சிவப்பு சீலைப் பார்த்து வாங்குங்கள்.




5, 10 மற்றும் 30 கிராம்களில் கிடைக்கிறது.

**ஜண்டு பாம் வலிகளை நீக்கும் பாம்**